பதிவு எண் M. 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 9] மதுரை 15—2—71 திங்கள் (வெளியூர் செவ்வாய் கிழமை 16—2—71) 4 பக்கங்கள் 12 காசுகள் [மலர் 8

### திண்டுக்கல்லில் தோழர் இ.எம். எஸ்.

காங்கிரசை முறியடிப்பதில் முன்பு பெருமை மிக்கப் பாத்திரம் வகித்துள்ள தி. மு. க. துரதிர்ஷ்ட வசமாக இப்போது காங்கிரசுடன் கூட்டுச் சேர்ந்துள்ளது என்றும் தி. மு. க. வை பிற்போக்குக் கட்சி என்று முன்பு கூறிய வலது கம்யூனிஸ்ட் கட்சி இப்போது முற்போக்குக் கட்சி என்று அழைப்பதாகவும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை பொறுத்தவரை தி. மு. க. வை எப்போதும் ஒரு முதலாளி வர்க்கக் கட்சியாகவே கருதி வந்திருப்பதாகவும், என்றாலும் அது காங்கிரசை எதிர்த்து தமிழ் நாட்டில் மட்டுமின்றி இந்தியா முழுவதிலும் ஜனநாயக சக்திகள் பலப்பட உதவிகரமாக இருந்தது என்றும், ஆனால் இன்று அது காங்கிரஸ் எதிர்ப்பைக் கைவிட்டு விட்டதால்தான் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எதிர்க்கிறது என்றும் தோழர் இ எம். எஸ் நம்பூதிரிபாத் கூறினார். அவர் இன்று இங்கு நடைபெற்ற 10 ஆயிரம் பேர் திரண்ட பிரம்மாண்டமான பொதுக்கூட்டத்தில் பேசினார் தேர்தல் நிதியாக ரூ.1000 வழங்கப்பட்டது

### வேட்பாளர்களுக்கு ஒரு வேண்டுகோள்

தேர்தலில் போட்டியிடும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளர்களில் இன்னும் புகைப் படங்களையும் வாழ்க்கைக் குறிப்புகளையும் அனுப்பி வைக்காதவர்கள் அவைகளை உடனடியாக அனுப்பி வைக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்

—ஆசிரியர்

# இரண்டும் பிற்போக்கே



## இண்டி - சிண்டி இரண்டையும் முறியடிப்பதே எங்களது குறிக்கோள்!

## மதுரை தேர்தல் நிதியளிப்பு விழாவில் இ. எம். எஸ்.

**சிலர் கெட்டிக்காரத்தனமாக எங்களை மடக்குவதாக நினைத்துக்கொண்டு, எங்களிடம் கேள்வி கேட்கிறார்கள்.**

**இந்திரா காந்தி தலைமையில் அமையும் ஒரு அரசை நீங்கள் விரும்புகிறீர்களா? அல்லது நிஜலிங்கப்பா காங்கிரஸ் தலைமையில் அமையும் ஒரு அரசை விரும்புகிறீர்களா?—என்று கேட்கிறார்கள்.**

**அவர்களுக்கு நாங்கள் கூறுகிறோம். இரண்டு காங்கிரஸ்களும் எந்தக் காங்கிரஸ் தலைமையிலும் அரசு அமைக்கக்கூடாது என்று தான் கூறுகிறோம்.**

*உனக்கு எந்த வியாதி வேண்டும்? காலரா நோயினால் சாக விரும்புகிறாயா அல்லது பிளேக் நோயினால் சாக விரும்புகிறாயா? —என்று கேட்டால், காலராவினாலும் சாக விரும்பவில்லை; பிளேக்கினாலும் சாக விரும்பவில்லை தடுப்பு ஊசி போட்டுக்கொண்டு எந்த நோயும் வராமல் பாதுகாத்துக்கொண்டு வாழவே விரும்புகிறோம். அந்த தடுப்பு ஊசி எது? அதுதான் புரட்சிகரமான மக்களின் ஜனநாயகப் போராட்டங்கள்! இதை வளர்க்கவே நாங்கள் பாடுபடுகிறோம்.*

*காங்கிரஸ் கட்சியில் பிற்போக்கு எது? முற்போக்கு எது?—என்று ஆராய்வது அல்ல எங்கள் வேலை. இரண்டுமே நாட்டைக் குட்டிச் சுவராக்கிய பிற்போக்கு சக்திகள் தான் என்பதே எங்கள் கொள்கை'' என்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) பொலிட்பீரோ உறுப்பினர் தோழர் இ. எம், எஸ். நம்பூதிரிபாத் அவர்கள் வெட்டு ஒன்று துண்டு இரண்டாகப் பதில் அளித்தார்.*

மதுரை நாடாளுமன்றத் தொகுதியில் போட்டியிடும் தோழர் பி. ராமமூர்த்தியையும், சட்டமன்றத் தொகுதிகளுக்குப் போட்டியிடும் தோழர்கள் என். சங்கரய்யா வி. கார்மேகம், வி. வீரபத்திரன், கே பி ஜானகியம்மாள் ஆகியவர்களை ஆதரித்தும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் 14—2—71ல் மதுரை திலகர் திடலில் நடந்த ஜன சமுத்திரப் பொதுக்கூட்டத்தில் தோழர் இ. எம். எஸ். பேசினார், கூட்டத்திற்கு தோழர் மன்னார்சாமி தலைமை தாங்கினார். தோழர்கள் என். சங்கரய்யாவும், வி. கார்மேகமும் பேசியபின் தோழர் இ. எம். எஸ். பேசினார்.

### ரூ, 25,000 நிதி

தேர்தல் நிதியாக தோழர் இ. எம். எஸ்ஸிடம், மதுரை நகரம் ரூ. 18,158-ம், மதுரை தாலுகா ரூ 3,380—ம், திருமங்கலம் தாலுகா ரூ. 1008-ம், விருதுநகர் மாணவர்களும், தொழிலாளர்களும் பொது மக்களுமாக ரூ 501-ம், திருப்புவனம் ரூ 65-ம். ஆக மொத்தம் 25,000 ரூபாய பலத்த ஆரவாரத்திடையே கொடுக்கப்பட்டது.

### இ. எம். எஸ். உரை

தோழர் இ. எம். எஸ். பேசியதாவது;—

1967-ம் ஆண்டில் காங்கிரஸ் கட்சியை முறியடிப்பதற்காக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி திராவிட முன்னேற்றக் கழகத்துடனும் மற்றும் பல கட்சிகளுடனும் கூட்டு சேர்ந்து தேர்தல் போர் நடத்தியது.

தேர்தல் களத்தில், காங்கிரஸ் கட்சியை மட்டுமல்ல, வலது கம்யூனிஸ்ட் கட்சியையும் எதிர்த்துப் போராடினோம்.

முடிவு என்ன? மேற்கு வங்கத்திலும் கேரளத்திலும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையிலும், தமிழ் நாட்டில் தி.மு.க. தலைமையிலும், மற்றும் பல மாநிலங்களில் காங்கிரஸ் அல்லாத பல்வேறு கட்சிகளின் தலைமையிலும் அமைச்சரவைகள் ஏற்பட்டன சரிபாதி இந்தியாவில் காங்கிரஸ் கட்சியை வீழ்த்தினோம்,

### காங்கிரசுடன் சேர்ந்தன

அது அன்றைய நிலை! இன்று என்ன பார்க்கிறோம். எந்த காங்கிரசுக்கு எதிராக்க கூட்டணி சேர்ந்து முறியடித்தோமோ, அந்த காங்கிரஸ் முகாமில் தி மு. க, வும் மற்றும் பல கட்சிகளும் சேர்ந்து விட்டதைப் பார்க்கிறோம்.

### பெரும் அவமானம்

இந்திரா காந்தி என்ன சொல்லுகிறார்? மத்தியில்பலம் பொருந்திய, நிலையான அரசு அமைக்க தனக்கு பெரும்பான்மை இடங்களில் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று இந்திரா கேட்கிறார்.

பார்லிமெண்டுக்கு பெரும்பான்மை கேட்கும் இந்திரா. தமிழ் நாட்டின் சட்ட மன்றத்தில் ஓரிரு இடங்களைக் கூட பெற முடியாத நிலையில் இருக்கிறார், சட்டமன்றத்தொகுதியில் ஒன்றிரண்டு இடங்களையாவது வாங்கி விட வேண்டுமென்று இந்திரா காந்தி மந்திரி சஞ்சீவய்யாவைத் தூது அனுப்பினார். ஜகஜீவன் பிரதிநிதியான இவரை அரை நிமிடம் கூட சந்தித்துப் பேசவில்லை கருணாநிதி அவரும் கருணாநிதியைச் சந்திக்கக்கூட முடியாமல் வெறுங்கையோடு திரும்பிச் சென்றார். நமது நாட்டின் வரலாற்றிலேயே, ஒரு பெரியகட்சிஇரலைடொரு சட்டமன்றத் தொகுதிக்காக கெஞ்சிக் கூத்தாடியதை தாம் பார்த்ததே இல்லை. இந்திரா காங்கிரசுக்கு எந்த மாநிலத்திலும் ஏற்படாத அவமானம் இங்கு தி. மு. க. வினால் ஏற்பட்டது. அது ஒரு புறமிருக்கட்டும்.

இந்த திராவிட முன்னேற்ற கழகம் இந்திரா காங்கிரசுடன் கூட்டுச்சேர வேண்டிய அவசியம் என்ன? அதனுடன் சேர்ந்தால் தான் வெற்றி பெற முடியுமென்ற அளவுக்குதி.மு க. பலவீனமாகவா இருக்கிறது! பின் ஏன் சேர்ந்தார்கள்.

### ஒப்பந்தமா?

சட்ட மன்றத்தில் ஒரு தொகுதி கூட கொடுக்காமல் தி. மு. க., நாடாளுமன்றத்திற்கு 10 தொகுதிகளைக் விட்டுக் கொடுக்க முன் வந்தது இதிலிருந்து தெரிவது என்ன?

தமிழ் நாடு சட்டமன்றத்தில் தி. மு. க. தனியரசு நடத்தட்டும்; நாடாளுமன்றத்தில இந்திரா தனிக்கட்சி ஆட்சி நடத்தட்டும் என்பதுதான் ஒப்பந்தமா? இவ்விதமாக காங்கிரசை எதிர்ப்பதாகக் காட்டிக் கொண்ட மாபெரும் வீரர் காங்கிரசுதுடன் போய் விட்டார். எதிர்ப்பணியிலிருந்த ஏனைய கட்சிகளும் காங்கரசுடன் போயி விட்டன.

நண்பர் அண்ணாத்துரையை நான நன்கறிவேன். அவர் இருந்தகாலத்தில், காங்கிரஸ் கட்சியை எப்படி தொடர்ந்து எதிர்த்துவந்தார் என்பதை நான் அறிவேன்.

அவர்தம் வாரிசு என்று கூறிக்கொள்ளும் தி.மு.க.வினர் 10 எம் பி தொகுதிகளை காங்கிரசுக்கு விட்டுக்கொடுக்கவும் அவற்றில்காங்கிரசுக்கு ஆதரவு திரட்டவும் முற்பட்டிருக்கிறார்கள்! என்ன வீழ்ச்சி பாருங்கள்!

### தொடர்ந்து போராடுவோம்

நாங்கள் அப்படி அல்ல. தொடர்ந்து காங்கிரசை எதிர்த்துப் போராடுவோம். தி மு க வும் காங்கிரசை எதிர்த்து வந்த இன்னும் பல கட்சிகளும் காங்கிரசுடன் போய்விட்டாலும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, தனது மகத்தான காங்கிரஸ் எதிர்ப்புப் போராட்டத்தை விட்டுவிடாது.

### நாங்கள் எதிர்ப்பது தனிநபரை அல்ல

காங்கிரசை எதிர்த்து நாங்கள் போராடும்போது, தனிப்பட்ட தலைவர்களை எதிர்த்துப் போராடவில்லை. அவர்களுக்குள் உள்மோதல்களைப் பற்றி எங்களுக்கு அக்கறையும் இல்லை.

பண்டிட நேருக்கும் சர்தார் பட்டேலுக்கும் சண்டை ஏற்பட்டது. நாங்கள் அக்கறை காட்டவில்லை. காமராசருக்கும் சி. ராஜகோபாலாச்சாரிக்கும் சண்டை ஏற்பட்டது. நாங்கள் அக்கறைப்படவில்லை. இந்திரா காந்திக்கும் மொரார்ஜி தேசாய்க்கும் சண்டை ஏற்பட்டது. நாங்கள் கவலைப்படவில்லை. சி. சுப்ரமண்யத்திற்கும் ஆர் வி சுவாமிநாதனுக்கும் சண்டை மூண்டிருக்கிறது அது பற்றியும் அக்கறை கொள்ளவில்லை.

### கொள்கையை எதிர்க்கிறோம்

இந்தத் தலைவர்கள் எல்லாம் ஒரே காங்கிரசில் ஒன்றாக இருந்த காலத்திலே, கூட்டாக எந்தக் கொள்கையை வகுத்தார்களோ — எந்தக் கொள்கையை இன்னும் அமுல்நடத்தி வருகிறார்களோ — அந்தக் கொள்கையைத்தான் எதிர்த்துப் போராடுகிறோம்,

[நாளை தொடரும்]

### 24 ஆண்டு காங்கிரஸ் ஆட்சிக்குப் பின்... !




ஆனந்த விகடனில் வெளியான இது போன்றதொரு கார்டூன் உண்மையின் அறை குறைச் சித்திரமாதலால், அதன் முழு வடிவினை நமது கார்டூனின் வெளியிடுகிறோம்.

## அச்சுதமேனன் ஆட்சியின் அபார சாதனைகள்!

தேர்தல் நெருங்க நெருங்க ஒவ்வொரு கட்சியினரும் தங்களது சாதனைகளை மக்கள் முன்னால் பட்டியல் போட்டுக் காட்டிக்கொண்டுள்ளனர்!

இந்நிலையில் இன்னும் தனது சாதனைப் பட்டியலை அச்சுதமேனன் தயாரிக்காமல் இருந்தால்—அன்னாருக்கு சிரமம் உண்டாககக் கூடாது என்பதற்காக நாமே அவரது சாதனைகளை பட்டியல் போட்டுத் தருகிறோம்!

1. அச்சுதமேனன் ஆட்சிக் காலத்தில்தான் 40 பேருக்கும் மேற்பட்டவர்கள், போலீஸ் துப்பாக்கிச் சூடு அல்லது ஆளும் வர்க்கங்களின் குண்டர் தாக்குதலுக்கு இரையானது!

2) குடியிருப்பு மனைக்காகப் போராடிய 60 ஆயிரம் பேரைக் கைது செய்து வழக்குத் தொடுத்தது.

3) மாணவர்களை அடித்து நொறுக்குவதை ஒழுங்காகத் தொடர்ந்து செய்து வருவது (திருவனந்தபுரம், ஆலப்புழை, ஆகிய இடங்களில் மாணவர்கள் தாக்கப்பட்டதற்கு இந்திரா காங்கிரசே கடும் எதிர்ப்புத் தெரிவித்தது)

4. போராடும் விவசாயத் தொழிலாளர்கள் மீது போலீசை ஏவி விடுவது! (குமரகத்தில் நடந்த விவசாயத் தொழிலாளர் போராட்டத்தில் போலீசை ஏவி விட்டதை இந்திரா காங்கிரசே கண்டித்தது)

5. ஆலப்புழையில் ஆறு ஏழை விவசாயத் தொழிலாளர் பெண்களை போலீஸ் மிருகத்தனமாக கற்பழித்தது!

6. கற்பழிக்கப்பட்டவர்களை மருத்துவ மனையில் அனுமதிக்க மறுத்தது. (பின்னர் ஆயிரக் கணக்கான மாதர்கள் கூடி ஆர்ப்பாட்டம் நடத்தியதன் விளைவாக அனுமதிக்கப்பட்டனர். பிளிட்ஸ் போன்ற ஏடுகளே இந்தக் காட்டு மிராண்டித் தனத்தைக் கடுமையாகக் கண்டித்தன.)

7. இவர்களை கற்பழித்துக் கொடுமை புரிந்த போலீஸ் காரர்கள் மீது ஆதார பூர்வமாக குற்றத்தை நிரூபித்த பின்னரும், அவர்களை சஸ்பெண்ட் செய்யாமல் விட்டது

8. மத்திய ரிசர்வ் போலீஸ் படையினை கேரள மண்ணிற்கு வரவழைத்தது.

9. கள்ளிக் காட்டிலே—தங்களது நிலத்தை நிலப் பிரபுக்களின தாக்குதலில் இருந்து பாதுகாத்துக் கொள்ளப் போராடிய குடிகிடப்புக் காரர்கள் மீது துப்பாக்கிச் சூடு நடத்தியது. (பார்கவி நீலகண்டன் எனும இரண்டு தொழிலாளர்கள் இத்துப்பாக்கிச் சூட்டினில் பலியாயினர்.)

10. லாக் - அப்புகளிலும் போலீஸ் நிலையங்களிலும் மிருகத்தனமாகத் தாக்கப்படுவது.

(அண்மையில் கொங்காடு எனும் இடத்தில் ஒரு நிலப் பிரபு கொலை செய்யப்பட்டதையொட்டி — கொங்காட்டில் போலீஸ் முகாமை நிறுவி நிரபராதிகளையெல்லாம் சித்திரவதை செய்தனர். அவர்தம் வீட்டுப் பெண்களையெல்லாம் மானபங்கப்படுத்தினர்)

11. அரசு ஊழியர்களின் ஊதிய முடக்கத்திற்கு அறைகூவல் விடுத்த முதலமைச்சரைப் பெற்றிருப்பது.

12. அரசு ஊழியர்கள் வேலை நிறுத்தப் போராட்டத்தில் ஈடுபட்டால், அவர்களது போராட்ட நாட்கள் லீவுநாட்களாகக் கருதப்படாது என்று அறிவித்தது

13. அத்யாவசியத் தொழிற் பராமரிப்புச் சட்டம் போன்ற காங்கிரஸ் அடக்கு முறைச் சட்டங்களைப் பயன்படுத்தி, அரசு ஊழியர்களை வேலை நிறுத்தப் போராட்டத்தில் ஈடுபடக்கூடாது என்று மிரட்டுவது!

14. 600 அரசு பஸ் தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்கிவிட்டு, அவர்களது பிரச்சனையை "தொழிற்தகராறு" என்று கூட அங்கீகரிக்க மறுத்தது.

(பின்னர் கடுமையான போராட்டம் நடத்திய பின்னர்—தொழிற்தகராறு என்று அங்கீகரிக்க நேர்ந்தது மட்டுமின்றி, 600 பேரையும் மீண்டும் எடுத்துக் கொள்ள நேர்ந்தது)

15. குட்டி முன்னணிக் கட்சிகளில் ஒன்றான முஸ்லீம்களின் தலைவரது மகன் கள்ளக்கடத்தலில் ஈடுபட்டதற்காக 2 லட்சம் ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டதும், கள்ளக் கடத்தலில் ஈடுபட்ட போது லீகின் தலைவரின் காரே பிடிபட்டதையும் பற்றி ஏதும் கூறாமல் வாய் மூடிக் கிடந்தது. (இவர்கள் தான் மார்க்சிஸ்ட் அமைச்சர்கள் மீது பொய்யான ஊழல் குற்றம் சாட்டுகளை எழுப்பி. ஐ மு. அரசின் முதுகில் குத்தினர் என்பது கவனத்திற் கொள்ள வேண்டியது)

இந்த வேதனைப் பட்டியலை நீட்டிக் கொண்டேபோகலாம்!

இதனை ரமோ—அச்சுதமேனனோ பட்டியல் போட்டு கேரள மக்களுக்குத் தரத் தேவையில்லை!

ஏனெனில்—

இந்த பட்டியலுக்கு பதில் சொல்வதற்கு அவர்கள் நேரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

### நடக்க இருப்பவை

இடம்: சுண்ணாம்பூர்

நாள்: 18—2—71 வியாழக்கிழமை

பேசுவோர்கள்:

தோழர்:

,, கி. இராமசாமி

,, ம வீரணன்

,, இராமசாமி ராஜா

மற்றும் பலர் பேசுவார்கள்.

இரவு 8 மணி அளவில் பரமசிவம் குழுவினரின் கலை நிகழ்ச்சி நடைபெறும்.

## பஞ்சப்படியை வெட்ட பச்சைக் கொடி காட்டுபவர்களுக்கா உங்கள் ஓட்டு?

தீக்கதிர்

"இதற்கு முன் நடைபெற்ற சரித்திர ரீதியான இயக்கங்கள் அனைத்தும்—சிறுபான்மையோர் பங்கு கொண்ட இயக்கங்களாகவே, சிறுபான்மையோரின் நலனுக்காக நடந்த இயக்கங்களாகவேதான் இருந்தன. பாட்டாளி வர்க்க இயக்கமோ—மிகப் பெரும்பான்மையோர் சுய உணர்வுடன் நடத்தும் சுயேச்சையான இயக்கம்"

—மார்க்ஸ்—எங்கெல்ஸ்

# நெசவாளர்களுக்கு முதலமைச்சரின் முதலைக் கண்ணீர்!

"கைத்தறி நெசவாளர்கள் துயர் தீர்ப்பதில் சழக அரசு மிகுந்த அக்கரை காட்டிவருகிறது. கைத்தறி துணி விற்பனை குறைந்து நெசவாளர்கள் துயருற்றபோது கைத்தறி மூட்டைகளை முதுகில் தூக்கிக்கொண்டு விற்பனை செய்தவர்கள் அறிஞர் அண்ணாவும் அவருடைய தம்பிமார்களும். எனவே கைத்தறி நெசவாளர்கள் கழகத்தை ஆதரிக்க வேண்டும்."

—முரசொலி (14-2-71)

என்று முதலமைச்சர் கருணாநிதி கீழப்பாவூரிலும், ஆலங்குளத்திலும் நடைபெற்ற கூட்டங்களில் பேசியிருக்கிறார்.

ஆனல், தி. மு. க. ஆட்சியில் கண்டதென்ன?

12,500 விசைத் தறிகளை புகுத்தப்பட்டும் நிலையில் நெசவாளர்கள் வாழ்க்கையில் மண் விழுந்துள்ளது.

இந்த நிலைமையில் மதுரையில் 1968 ஜூன் மாதத்தில் 50 ஆயிரம் நெசவாளர்கள் ஆர்ப்பாட்டம் நடைபெற்றது.

- விசைத்தறியைப் புகுத்துவதைக் கண்டித்தும்
- ரிசர்வ் பாங்கு சுற்றறிக்கையை வாபஸ்பெறக் கோரியும்
- கூலி நிர்ணயச் சட்டம் கொண்டுவரக் கோரியும் நெசவாளர்கள் தொடர் உண்ணாவிரதம் இருந்தார்கள்.

இந்தப் போராட்டத்தில் ஈடுபட்டவர்களில் நூற்றுக் கணக்கானவர்கள் கைதுசெய்யப்பட்டு மதுரை மத்திய சிறையில் அடைக்கப்பட்டனர்.

கைத்தறி துணிகளைத் தோளில் சுமந்து விற்றவர்கள் ஆட்சிபீடம் ஏறியதும் நெசவாளர்களின் துயர் துடைத்தார்களா? தொழில் பாதுகாப்பு கோரி ஆர்ப்பாட்டம் செய்ததற்காக சிறையில் அடைத்தார்களா?

செல்லூரில் 4—8—70-ல் கூலி வெட்டை எதிர்த்து நெசவாளர்கள் போராடியபோது நடந்ததென்ன? நெசவாளர்களின் மண்டைகளைத் தி. மு. க. அரசின் இரும்புக் கரம் பதம் பார்த்தது. போலீஸ் தடியடிப்பிரயோகத்தில் 50 பேருக்குமேல் காயமடைந்தனர். தி. மு. க. சங்க தொழிலாளர்கள் உட்பட 90 பேர் கைது செய்யப்பட்டனர்.

இன்றும் கரூர், ராஜபாளையம் பரமக்குடி போன்ற இடங்களில் எல்லாம் நெசவாளர்கள் போராடியபோது தி. மு. க. அரசு இரும்புக் கரத்தைக் காட்டிவிட்டு தேர்தல் வந்ததும் நெசவாளர்களுக்காக முதலமைச்சர் முதலைக் கண்ணீர் வடிப்பதேன்?

# இந்திராவின் இரக்கம்!

"இந்தச் சிறுவயதில் நீ பள்ளிக்கூடம் போகாமல் ஏன் வயலில் வேலை செய்கிறாய்?"

சிறுவனிடம் இரக்கம் ததும்ப இவ்வாறு கேட்டது யார்? வேறு யாருமல்ல இண்டிகேட் தலைவி பிரதமர் இந்திரா காந்திதான்!

திருவண்ணாமலையில் கூட்டத்தை முடித்துக்கொண்டு இந்திரா திரும்பும்போது, வயலில் வேலை செய்துகொண்டிருந்த சிறுவன் ஒருவனைக் கண்டாராம். எலும்புந் தோலுமாய் உள்ள அச்சிறுவன் வயலில் இடுப்பொடிய வேலைசெய்து கொண்டிருப்பதைப் பார்த்ததும், அவருடைய உள்ளம் நெருப்பிலிட்ட மெழுகாய் கரைந்துவிட்டது போலும்! அதனால்தான் இரக்கம் ததும்ப இந்திரா காந்தி அவ்வாறு கேட்டுள்ளார்.

தேர்தல் சமயங்களில் காமராசர் இந்த ஸ்டண்ட் அடிப்பதுண்டு. அதேபாணியில் இந்திரா கேட்டிருக்கிறார்.

அந்த ஏழைச் சிறுவன் பள்ளிக்குச் செல்லாமல் வயலில் உடல் வருந்த ஏன் வேலை செய்கிறான் என்பது இந்திராவுக்குத் தெரியாதா! தெரியும்.

பெருமுதலாளிகளையும் பெரு நிலச்சுவான்களையும் கொழுக்க வைக்கும் தன்னுடைய ஆட்சியில் ஏழைச் சிறுவர்கள் படிக்கக் கூடிய அளவுக்கு வீட்டில் வசதி இல்லை.

தந்தையும், தாயும் உழைத்தால் மட்டும் போதாது. குழந்தைகளும் உழைத்தாக வேண்டும். அந்த அளவுக்கு விவசாயிகளை உயர்த்தியுள்ளனர் இந்திரா காவல்புரியும் ஆண்டும் வர்க்கத்தினர்!

இது இந்திராவுக்குப் புரியாதா? புரியும். பின் ஏன் இந்த நடிப்பு? இரக்கம் எல்லாம் தேர்தலுக்காக

## அரசியல் சட்டத்தின் அடிப்படை நோக்கம்

# முதலாளிவர்க்க ஆட்சியை நிலை நாட்டுவதே (2)

**—பி. டி. ரணதிவே**

அரசியல் சட்டத்தில் பிரகடனப்படுத்தப்பட்டுள்ள அடிப்படை உரிமைகள் முதலாளி வர்க்க ஆதிக்கத்தைப் பலவீனப்படுத்துமானல், அந்த உரிமைகள் நிராகரிக்கப்படும் என்பதை லெனின் கண்டறிந்து கீழ் வருமாறு கூறினர்.

"நவீன அரசுகளின் அடிப்படைச் சட்டங்களையும் நிர்வாகத்தையும் எடுத்துக் கொள்ளுங்கள். கூட்டம் சேரும் சுதந்திரம், பத்திரிகை சுதந்திரம் அல்லது சட்டத்தின் முன்பாக எல்லா பிரஜைகளும் சமம் பற்றிய பிரகடனம் ஆகியவற்றை எடுத்துக் கொள்ளுங்கள். முதலாளித்துவ ஜனநாயகத்தின் பித்தலாட்டத்தை ஒவ்வொருஇடத்திலும் காண முடியும். என்னதான் ஜனநாயகமானதாக இருந்தாலும் அரசியல் சட்டத்தில் ஓட்டைகளில்லாத முதலாளி வர்க்க அரசு எதும் இல்லை. இதன் மூலம் தொழிலாளர்களுக்கு எதிராக துருப்புகளை அனுப்ப முடிகிறது. பொது ஒழுங்கு பெரியல் ராணுவச்சட்டத்தைப் பிரகடனம் செய்ய முடிகிறது. சுரண்டப்படும் வர்க்கம் அடிமைத்தனத்தை மீறுமானல் ராணுவச் சட்டத்தைப் பிரகடனம் செய்ய முடிகிறது. முதலாளி வர்க்கஜனநாயகத்தை வெட்கமின்றி போற்றும் காட்ஸ்கி அமெரிக்காவிலோ ஸ்விட்சர்லாந்திலோ முதலாளி வர்க்கம் தொழிலாளர்களின் வேலை நிறுத்தங்களை எவ்வாறு ஒடுக்குறது என்பதைக் கூறவில்லை" (பாட்டாளி வர்க்கப் புரட்சியும் ஒடு காலிகாட்ஸ்கியுமஎன்னும் நூலில்

இதைக் கூறும் போது முதலாளிவர்க்க ஜனநாயகத்தைப் போற்றிப் புகழும் வேலையை நம் நாட்டில் வலது கம்யூனிஸ்ட் கட்சியும் சர்வதேச ரீதியாக சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் திருத்தல்



வாதத் தலைவர்களும் மேற்கொண்டுள்ளனர் என்பதுக் குறிப்பிடத் தக்கதாகும்.

தம் காலத்தின் முதலாளி வர்க்க அரசியல் சட்டங்களின் நிலையை லெனின் சரிவரக்குறிப்பிட்டதுடன நின்றுவிடவில்லை. பொது ஒழுங்கு மீறப்பட்டால் என்ன நடக்கும் என்பதை பற்றி அவர் குறிப்பிட்டிருப்பது இந்திய அரசியல் சட்டத்துக்கும் பொருந்துகிறது. இந்திய அரசியல் சட்டத்தின் 19வது பிரிவு பேச்சு சுதந்திரத்தையும் சருத்துவெளியிடும் சுதந்திரத்தையும் கூட்டம் சேரும் சுதந்திரத்தையும் அளிக்கிறது. ஆனல்இவையெல்லாம்பொது ஒழுங்குக்கும்அரசின் பாதுகாப்புக்கும் உட்பட்டதாக இருக்க வேண்டும் என்றும் விதிக்கிறது பொது ஒழுங்கின் பெயரில் அல்லது அரசு பாதுகாப்பின் பெயரில் இந்த உரிமைகளின் மீது கட்டுப்பாடுகளை விதிப்பதற்கு அரசியல் சட்டத்தின் 2, 3, 4-வது பிரிவுகள் அரசுக்கு அனுமதி அளிக்கிறது

லெனின் காலத்திலிருந்தமுதலாளி வர்க்க அரசுகளின் அரசியல் சட்டங்களில் இவ்வளவு திட்டவட்டமாககூறப்படாதிருக்கக்கூடும். ஆனல, இந்திய அரசியல் சட்டம் எந்தச் சந்தேகத்துக்கும் இடம்வைக்கவில்லை எந்த உரிமையையும் போலீசின் குண்டாந்தடிக் நட்பட்டதுதன் என்பது தெட்டத்தெளிவாக்கப்பட்டுள்ளது.

ஆளும் வர்க்கத்தின் நலன்களுக்குக் குறுக்கே வராமலிருந்தால் தான் எந்த உரிமையை சகித்துக் கொள்ளப்படும்

பொது ஒழுங்கு என்றால் என்ன? தொழிலாளி வர்க்கத்தின் வேலைநிறுத்தம், முதலாளிகளின் கண்ணோட்டப்படி பொது ஒழுங்கை மீறுவதேயாகும்

லெனின் கூறியபடி அடிமைத்தனத்திலிருந்து தொழிலாளி வர்க்கம் விடுபட முயற்சித்தால் அதைப் பொது ஒழுங்கை மீறும் நடவடிக்கையாகவே முதலாளி வர்க்கம் கருதுகிறது. நிலத்துக்காக விவசாயத் தொழிலாளர்கள் நடத்தும் ஆர்ப்பாட்டங்கள் பொது ஒழுங்கை மீறிய நடவடிக்கையாகவே கருதப்பட்டது சில மாநிலங்களில் ஆசிரியர்களின் வேலைநிறுத்தத்தைக் கூட பொது ஒழுங்கை மீறிய நடவடிக்கையாகக் கருதப்பட்டு, அதற்குத் தடை விதிக்கப்பட்டது. அத்தியாவசிய சர்வீஸ்களில் வேலை நிறுத்தம் செய்வதற்குத் தடை. எந்த வேலையையும் அத்தியாவசிய சர்வீசாகப் பிரகடனம் செய்து வேலை நிறுத்தத்துக்குத் தடை விதிப்பது; 144 தடையுத்தரவு பிறப்பிப்பது பொதுஒழுங்கின் பெயரில் கூட்டம் சேரத்தடை விதிப்பது; தொழிற்சங்க அலுவலகங்களைச் சோதனையிடுவது, கைதுகள் செய்வது அடித்து நொறுக்குவது இவையெல்லாம் நியாயமான கட்டுப்பாடாகக் கருதப்படுகின்றன 144-வது பிரிவின்கீழ் தடையுத்தரவுகள் பிறப்பிப்பது அடிப்படை உரிமைகளுக்கு முரணானதல்ல என்று அண்மையில் சுப்ரீம் கோர்ட் நீதிபதிகள் தீர்ப்பளித்துள்ளனர்,

இந்த நிலைமை தற்காலிகமானதல்ல. அரசியல் சட்டத்தின் நோக்கங்களுக்கு புறம்பாக இந்த நிலைமை எழுந்துள்ளதாகவும் கருதமுடியாது. இந்த அரசியல் சட்டத்தை மோசமாக அரசாங்கம் அமுல் நடத்தியதின் விளைவாக எழுந்துள்ள நிலைமை என்றும் இதைக் கருதமுடியாது. அரசியல் சட்டத்தில் பொறிக்கப்பட்டிருக்கும் வர்க்க ஆட்சியின் தர்க்கரீதியான விளைவுகளே இவை.

எல்லா முதலாளிவர்க்க அரசியல் சட்டங்களிலும் இருக்கக்கூடிய சூழ்ச்சியெல்லாம் மனித உரிமைகளின் பெயரால்பொது விதிகளாக அவை இயற்றப்பட்டிருப்பதேயாகும். நடைமுறையில் வர்க்கங்களுக்கிடையேயுள்ள பேதங்களை அவை மூடி மறைத்துவிடுகின்றன சுரண்டுபவர்களுக்கும் சுரண்டப்படுபவர்களுக்கும் இடையேயுள்ள பேதத்தை அவை மூடிமறைத்துவிடுகின்றன டாட்டாக்களையும் பிர்லாக்களையும் சிங்கானியாக்களையும் வேர்வை சிந்தி உழைக்கும் மக்களுடன் இந்த அரசியல் சட்டம் சமமாக வைக்கின்றன.

( 4—ஆம் பக்கம் பார்க்க )

அன்புள்ள ஆசிரியருக்கு!

வறுமைக்குகாரணம் என்ன? ஜனத்தொகை பெருகிவிட்டது தான் என்று ஆட்சிபீடத்திலுள்ள காங்கிரஸ் ஆட்சியினர் பேசுகின்றனர். வேலையில்லாத் திண்டாட்டத்துக்கு காரணம் என்ன? ஜனத்தொகைபெருகிவிட்டது. பொருளாதார நெருக்கடிக்குக்காரணமஎன்ன? ஜனத்தொகை பெருத்து விட்டது. ஆகவே எல்லா பிரச்னைகளையும் தீர்க்க ஒரே ஒரு வழி தான் உண்டு அதாவது ஜனத்தொகை பெருக்கத்தை குறைக்க வேண்டும். இது காங்கிரஸ் கட்சியின் பிரசாரம் மட்டுமல்ல: தி. மு. கவின் கூட்டுப்பாடான பிரசாரமும் கூட. எனவே, முரசொலியிலிருந்து அரசாங்க ஆலாசாக்கள் வரை செய்யப்படும் ஒரே பிரச்சாரம் 'திட்டமிட்ட குடும்பம் தெவிட்டாத இன்பம்' தாயும் தந்தையும் இருபுறம் இடையே இரு குழந்தைகள்; இதுபோதும் என்ற படங்கள் வீதி தோறும் வீடு தோறும் அரசாங்க செலவில் ஒட்டப்படுகின்றன.

அறுவைச் சிகிச்சை செய்யும் டாக்டர்கள் இலவசமாக குடும்பக் கட்டுப்பாடு மாத்திரைகள் சர்வதேச ரீதியில் இலவசமாக வரவழைக்கப்பட்ட மருந்துகள், சாதனங்கள் வினியோகிக்கப்படுகின்றன.

இந்திய அரசாங்கத்தின் செலவு கணக்கில் குடும்பக் கட்டுப்பாட்டுக்காகசெலவிடப்படும் தொகை 1951 – 55ம் ஆண்டுகளில் 1 கோடியே 45 லட்சம்ஆக இருந்த செலவினம் திடீரென்று 1968 - 69ல் 37 கோடியாக உயர்ந்தது இவ்வளவு பெரும் தொகையைச் செலவிட்ட போதும் இதற்கு மக்களிடையே வரவேற்பு உண்டா? இலை என்று அரசாங்கத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

இவ்வளவு பெரும் தொகையைச் செலவழித்து அரசாங்கம் சாதித்தது என்ன?

67 லட்சம் பேருக்கு அறுவைச் சிகிச்சை; 31 லட்சம் பேருக்கு கருத்தடை 'லூப்' பொருத்தப்பட்டதாம்.

ஆனல், இந்தியாவின் ஜனத்தொகை எவ்வளவு தெரியுமா? 56 கோடி ஆகும். மேலும் கருத்தடை சாதனங்களை பெற்றவர்கள் கூட உற்சாகமாக அவைகளைபயன்படுத்தவிரும்பவில்லையாம்,தபோய்அறுவைச் சிகிச்சை செய்து கொண்டவர்களைத் தவிர—அரசாங்கத்தின் திட்டம் 25லிருந்து 35 சதவிதம் பிறப்பு விகிதத்தை குறைப்பதாகும் ஆனல், 42 கோடி ரூபாய் செலவு செய்தும் கூட 5 சதவீதம் கூட இந்திய ஜனத்தொகையின் அதிகரிப்பு விகிதத்தைக் குறைக்கமுடியவில்லை.




# குடும்பக் கட்டுப்பாடு! வெறும் கூப்பாடே!

செத்தையபடுதோல்வியிலிருந்து காங்கிரஸ்காரரும். தி. மு க.வினரும் படிப்பினையை பெற்றார்களா? இல்லை. இந்தப் பிரச்சனையைப் பற்றிய தங்களுடைய தவறான பார்வையை புனராலோசனை செய்ய மறுக்கிறார்கள். விடாப்பிடியாக ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் காந்தி நூற்றாண்டு விழாவில்கூட குடும்பக் கட்டுப்பாடு பற்றி பேசுகிறார்கள்

1921–ம் ஆண்டுவரை ஜனத்தொகை குறைப்பு என்ற பிரச்சனை எழவே இல்லை. அதற்குப் பின்தான் வைத்திய வசதிகளும். நவீன சாதனங்களும் அதிகரித்த பின்தான் ஜனத்தொகை அதிகரிப்பு என்பது ஏற்படுகிறது என்பது ஒரு பிரச்சனையாக எழுந்தது ஒரு ஆண்டுக்கு 2·5 சதவீதம் ஜனத்தொகை அதிகரிப்பு என்பது ஏற்பட்டது. இது மேலும் மேலும் அதிகரித்து வருகிறது

இதை ஒழுங்குபடுத்தும் வழி என்ன? என்பதுதான் இப்பொழுதுள்ள பிரசசனை. மேற்கத்தய நாடுகளில்நவீன மருத்துவ சாதனங்களின் வளர்ச்சியின் காரணமாகவும் மக்களின்மனோபவங்களின் காரணமாகவும், பிறப்பு விகிதத்தை ஒருவாறு கட்டுப்படுத்த முடிகிறது. ஆனல் இங்கு அந்த அணுகுமுறை வெற்றியடைய முடியவில்லை. இதற்கு பல்வேறு காரணங்கள் உண்டு. சமுதாயப் பார்வை, குடும்பம் பற்றிய பார்வை, பிறப்பு இறப்பு பற்றிய நம்பிக்கைகள் ஆகியவைகள், இவற்றில் குறுக்கிடுகின்றன. குடும்பத்தில் அதிகக் குழந்தைகள் இருந்தால் அது பெரும் பாக்கியம் என்றே இங்கு கருதுகிறார்கள். அதிகக் குழந்தைகள் இருந்தால் அவர்கள் நமக்கு சம்பாதிக்கப் பயன் படுவார்கள் என்ற நம்பிக்கை உள்ளவர்களும் உண்டு. திட்டமிட்ட குடும்ப வாழ்வு என்பது நல்லதுதான். ஆனல் இதில் மக்களை அக்கறை கொள்ளச் செய்வது எப்படி?

நாம் இந்தப் பிரச்சனையை அணுகும்முறை தெளிவானது. ஒரு குடும்பத்தை சரியான முறையில் உண்டாக்கிக் கொள்ள குடும்பக் கட்டுப்பாடு பயன்படுமானல் உபயோகமாக இருக்கும். அந்தக் குடும்பத்தின் சுகாதாரம், வாழ்க்கை இவைகளை முறைபடுத்திக் கொள்ள அந்தக் குடும்பத்தினரே விரும்பி பயன்படுத்திக்கொண்டால் பயனுடையதாக இருக்கும்.

ஆனல் இதுவல்ல ஆட்சியாளர்கள் இன்று பின்பற்றும் முறை. தங்களுடைய பொருளாதாரத் திட்டங்களும் படுதோல்வியடைந்து நாட்டு மக்களது வேலையில்லாத திண்டாட்டத்தை தீர்க்கமுடியாது போனபிறகு தங்களதுயையாலாகாதத்தனத்தையும், மக்கள் விரோத அரசியல் பொருளாதார கொள்கைகளையும் மூடி மறைப்பதற்காகக் குடும்பக் கட்டுப்பாடு பற்றி கூப்பாடு போடுகிறார்கள். மக்களது கவனத்தை அரசாங்கத்தின் தவறான கொள்கைகளிலிருந்து திசைதிருப்புவதற்காக, இன்றைய ஊழல் நிறைந்த சமுதாய அமைப்பின் போலித்தனத்தை மூடி மறைப்பதற்காக குடும்பக் கட்டுப்பாடு திட்டம்பற்றி ஆட்சிபீடத்திலுள்ள காங்கிரஸ்காரர்களும் தி. மு. க. வினர்களும் கூப்பாடு போடுகிறார்கள் ஜனத்தொகை அதிகரிப்பதன் காரணமாக நாட்டின் பொருளாதார கஷ்டங்களும் நட்டங்களும் அதிகரிக்குமா என்று கேட்டால் நாம் அழுத்தம் திருத்தமாக இல்லையென்றே பதில் கூறுவோம்.

ஒரு நாட்டின் ஜனத்தொகையை பொருத்தது அல்ல, அந்த நாடு சுபிட்சமாக இருக்கிறதா? இல்லையா? என்பது. நமது நாடோ எண்ணற்ற இயற்கை செல்வ வளங்களை உடையது. உலகத்திலே மிக அதிகமாக நிலக்கரி இரும்பு முதலியவை கிடைக்கும் நாடு நமது நாடு; கன்னலும் செந்நெலும் கணக்கின்றித் தரும் நாடிது. இதனுடைய இயற்கை வளங்களைப் பயன்படுத்தினல் இன்னும் எத்தனையோ கோடானு கோடி மக்கள் வாழ முடியும். இத்தகைய நாட்டில் ஜனத்தொகைக் கூப்பாடு கிளம்பியிருக்கிறது என்றால் இதற்குக் காரணம் இந்த நாட்டில் போதிய சாதனங்கள் இல்லை என்பதினல் அல்ல; மாறாக, இந்தச் சாதனங்களை பயன்படுத்திக்கொள்ளும் ஒரு சமுதாய அமைப்பும், அரசாங்கக் கொள்கையும் இல்லை என்பதுதான். ஒரே ஓர் உதாரணம் சீன; இது நம் நாட்டிற்கு பொருந்தமான உதாரணம் கூடதான்; இயற்கை வளங்களில் சீன நம நாட்டைவிட குறைவான சாதனங்களை உடையதே அந்தப் பரந்த தேசத்தில் மூன்றில் இரு பகுதிகள் எதுவும் விளையாதது. ஆனல் இந்த நாடு, இயற்கை வளம் இல்லாத அதிகமான ஜனத்தொகையை (75 கோடி மக்கள்)கொண்டது என்றாலும், தன்னிறைவு கொண்ட ஒரு நாடாக இன்று விளங்குகிறது.

எனவே, ஜனத்தொகைப் பெருக்கத்தைக் காட்டி வறுமைக்குக் காரணம் காட்ட வேண்டாம். ஒரு மனிதன் பிறந்தான் என்றால், ஒருவயிறு மட்டும் அல்ல இரண்டு கரங்களும் உண்டு என்ற உண்மையை அங்கீகரித்து வந்தால், ஜனத்தொகைப் பிரச்னையை எழுப்பவேண்டிய அவசியமே நேர்ந்திருக்காது. இன்றுள்ள மக்களையே சரியான விதத்தில் திட்டமிட்டு பயன்படுத்தும் பார்வை, நடைமுறை கொள்கை இல்லாமல், பணக்கார வர்க்கங்களை, குறிப்பாக பெரும் முதலாளிகளையும், நிலச்சுவான்தார்களையும் திட்டமிட்டு பாதுகாக்கும் இந்த அரசு பெற்றிருப்பதுதான், வறுமைக்கும் வேலையில்லாத் திண்டாட்டத்திற்கும் அடிப்படையான காரணமே தவிர, ஜனத்தொகைப் பெருக்கம் அல்ல. இதற்குப் பரிகாரம் காணும் வழி குடும்பக் கட்டுப்பாடு திட்டமும் அல்ல.

ப. ஆறுமுகம் மதுரை.

# கருணாநிதி பற்றி வலது கம்யூனிஸ்டுகள்

"எல்லாவற்றிலுமே தான் நினைப்பதுபோல் முதன் மந்திரி நடந்துவருகிறார். இது பெரிய சர்வாதிகாரியின் செயலாகும் இது நீடிக்காது; மழையில் முளைத்த காளான்கள்போல் மறைந்துவிடும்"

(தினமலர் 15—9—70)

—என்று குற்றம்சாட்டியிருப்பவர் வேறு யாருமல்ல; வலது கம்யூனிஸ்ட் திரு பாலதண்டாயுதம்தான்!

இன்று— தான் நினைப்பதுபோல நடக்கும் அந்த சர்வாதிகாரியின் ஆதரவிலே மழையில் முளைத்த காளானின் நிழலிலே— ஒதுங்கி ஒண்டி அண்டிக் கிடக்கும் வலது கம்யூனிஸ்டுகளே! நீங்கள் தி மு க வுடன் கூட்டுச் சேர்ந்திருப்பது— நீங்கள் கூறும் 'சர்வாதிகாரியின்' கரத்தைப் பலப்படுத்தவா? அல்லது — நீங்கள் முன்பு தி. மு க பற்றி சொன்னதெல்லாம் "தப்பு! தப்பு" என்று தோப்புக் கரணம் போடுவீர்களா?

கேள்வி:— மிகக் குறைந்த ஸ்தானங்களையே வலது கம்யூனிஸ்டுகளுக்கு தி. மு க. அளித்திருப்பது பற்றி வலது கம்யூனிஸ்டு அணிகளிடையே பெரும் கொதிப்பு ஏற்பட்டுள்ளது.

இதுபற்றி திரு கல்யாணசுந்தரத்தை திருச்சியில் பத்திரிக்கை நிருபர்கள் கேள்வி கேட்டனர்! அதற்கு கல்யாணசுந்தரம் கூறிய பதில்:—

"ஒவ்வொரு கட்சியும் தொகுதிகளை கைப்பற்றுவதற்குத்தான் கூட்டணியில் சேர்ந்தது என்று கட்சி ஊழியர்கள் கருதக்கூடாது"

(தினமலர் 3—2—71 திருச்சி பதிப்பு)

என்று 'இரத்தின' சுருக்கமாக திருவாய்மலர்ந்தருளியுள்ளார். கல்யாணசுந்தரம் கூறுவதின்படி — இன்று வலது கம்யூனிஸ்டு ஊழியர்களின் கொதிப்பிற்கு காரணம் தொகுதிகளைக் கைப்பற்றத்தான் கூட்டணி என்ற எண்ணம் அவர்களிடையே இருப்பதுதானும்! புரிகிறதா?

கூட்டணி எதற்காக என்று வலது கம்யூனிஸ்டு அணியினர் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை, தங்களது "முற்போக்குக் கூட்டணி பற்றிய வலது கம்யூனிஸ்டு அணியினரின் மனோபாவம் இதுதான் என்றால்—சிண்டிகேட் அணியை எதிர்த்துப் போராடுவதற்காக கூட்டணி அமைத்தோம் என்று கூறுவது எவ்வளவு போலித்தனமானது? அல்லது தலைவர்கள் தங்களது சுயநலத்திற்காக—தனது கட்சி ஊழியர்களை எவ்வளவு கொச்சைப்படுத்துகிறார்கள்?

எது எப்படியிருந்தாலும்—வலது கம்யூனிஸ்டு தலைமையின் போக்கினை எதிர்த்து—அக்கட்சியின் தொண்டர்களும் ஊழியர்களும் பெருமளவில் மனம் வெதும்பி நிற்கின்றனர்!

பற்பல இடங்களில்—வலது கம்யூனிஸ்டு கட்சியை உதறி எறிந்துவிட்டு—மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சியை நோக்கி வந்தவண்ணமுள்ளனர்!

# யார் முற்போக்கு?

"நிலச் சீர்திருத்தத்தில் தீவிரம் காட்டுவதைவிட நில உடைமைக்குப் பாதுகாப்பு அளிப்பது அதிக முக்கியமானது"

—சென்னையில் நிருபர்களிடம் சி. சுப்பிரமணியம் பேசியது (தினமலர்—7-4-70)

"நில உச்சவரம்பைக் குறைப்பது என்பது சுலபமாகச் செய்யக்கூடியதே; ஆனல் அப்படி குறைத்தபின் மிச்ச நிலத்தை வினியோகிக்கும்போது பல அபாயங்கள் ஏற்படும்"

—சோழவந்தானில் காமராஜர் பேசியது.
(எக்ஸ்பிரஸ் 7—4—70)

"முற்போக்கு, முற்போக்கு" என்று ஓயாமல் முழங்கி ராஜ்யசபைத் தேர்தலில் சி. சுப்பிரமணியத்திற்கு வாக்குப்போட்ட வலதுசாரிகளே! இப்போது அவரது கட்சியுடன் இணைந்து—அவரது கட்சியின் வேட்பாளர்களுக்கு வாக்குச் சேகரித்துவரும் திருத்தல் வாதிகளே!

இதில் யார் முற்போக்கு? யார் பிற்போக்கு? என்பதை உங்களால் கூறமுடியுமா? முடியாது!

காரணம்—இருவரும் ஒரே கருத்தினை—ஒரே குரலில் முழக்குவதைக்கூடப் புரிந்துகொள்ள முடியாத அளவிற்கு உங்களது வர்க்கப் பார்வையை—இந்திரா பஜனையில்—இழந்து நிற்கிறீர்கள்!

## தி. மு. க. வலது கம்யூனிஸ்டுகளுடன்

# "திட்டத்தின் அடிப்படையில் கூட்டுச் சேரவில்லை"யாம்!

## செப்புகிறார் ஜகஜீவன்ராம் வேறு எந்த அடிப்படையில் சேர்ந்துள்ளார்?

ஜெய்ப்பூர், பிப். 14

தி. மு. க. வலது கம்யூனிஸ்ட் கட்சி, முஸ்லீம் லீக் ஆகிய கட்சிகளுடன் இந்திரா காங்கிரஸ் எந்தத்திட்டத்தின் அடிப்படையிலோ தேர்தல் அறிக்கையின் அடிப்படையிலோ கூட்டுச்சேரவில்லை என்று இந்திரா காங்கிரஸ் கட்சியின் தலைவர் ஜகஜீவன் ராம் இங்கு இன்று கூறினர்.

சோஷலிசத் திட்டத்தை அமுலாக்குவதற்காகவே முற்போக்குக் கூட்டணி அமைத்திருப்பதாக தேர்தல் பிரசாரம் செய்யும் தி. மு. க வும் வலது கம்யூனிஸ்ட் கட்சியும் ஜகஜீவன் ராமுக்கு அளிக்கும் பதில் என்ன?

# அரசியல் சட்டத்தை மாற்றுவாராம்

## ஜகஜீவன்ராம் கரடி

ஜெய்ப்பூர், பிப். 14—

சமூக நீதிக்கு குறுக்கே நிற்குமானல் அரசியல் சட்டத்தில் மாறுதல் செய்யத் தயங்க மாட்டோம் என்று காங்கிரஸ் தலைவர் ஜகஜீவன் ராம் இங்கு இன்று கூறினர்.

கடந்த 20ஆண்டு காலத்தில் இந்த அரசியல் சட்டம் சட்டத்தின் கீழ் 75 ஏகபோக வாதிகள் வளர்ந்து மக்கள் ஒட்டாண்டியாகியிருக்கும் போது ஒன்றுமே செய்யாத காங்கிரஸ் கட்சியின் தலைவர்தான் தேர்தல் சமயத்தில் இவ்விதம் வாக்குறுதியளித்துள்ளனர்.

# சாமிச் சண்டைகளை மூட்டி, மக்கள் பிரச்சினைகளை மறைக்கிறார்கள்!

திராவிடர் கழகம் அண்மையில் அதன் மாநாடு சேலத்திலே நடந்த போது, ஸ்ரீராமர் படத்தையும் முருகன் படத்தையும் செருப்பால் அடித்தார்களாம்!

இந்த நிகழ்ச்சியை சிண்டிகேட் காங்கிரஸ்காரர்கள் நன்கு பயன்படுத்திக் கொண்டு மக்களிடம் மதப் பிரச்சாரத்தை அவிழ்த்து விட்டிருக்கிறார்கள். அதனால் கருணாநிதியின் கூட்டணியில் கலக்கம் ஏற்பட்டுள்ளது.

ஈ. வெ. ரா. பெரியார், காமராசரை பச்சைத் தமிழன் என்று பாராட்டி ஆதரித்து வந்த காலத்தில், பெரியார் பிள்ளையார் சிலையை உடைத்தார், ராமர் படத்தை எரித்தார். கம்ப இராமாயணத்தைக் கொளுத்தினர். கிருஷ்ணன் பொம்மையை உடைத்தார் எத்தனையோ கூத்தெல்லாம் நடத்தினர்.

அக்காலத்தில் காமராசரை பெரியார் ஆதரித்ததால், பெரியாரின் செயல்களை காமராசரும்பக்தவத்சலமும் கண்டித்து நடவடிக்கை எடுக்கவில்லை. நடவடிக்கை எடுத்தாலும் எறும்புக்கடி, கொசுக்கடி மாதிரி எடுத்தார்கள். அன்றைய நிலை அது!

இன்றைய நிலை என்ன? பெரியார் கருணாநிதியை ஆதரிக்கிறார். கருணாநிதியின் கூட்டணியில் அங்கம் வகிக்கிறார்.

அதனால் காமராசரின் சிண்டிகேட் காங்கிரஸ் திராவிடக் கழகத்தையும், அதனுடன் முடிச்சுப் போட்டுக் கொண்டிருக்கிற தி மு க. சழகத்தையும் போடு போடுஎன்று போடுகிறார்கள். ராமர் படத்தையும் முருகன் படத்தையும் பெரியார் செருப்பால் அடிப்பது போலவும், கருணாநிதி அதைக் கண்டு சிரிப்பது போலவும் சுவரொட்டி போட்டிருக்கிறார்கள்.

பெரியார் எந்தக் கூட்டணியிலும் சேராமல் — யாரையும் ஆதரிக்காமல்-தனியே இருந்து —எத்தனைசாமி படத்தை அவமதித்தாலும் எத்தனை பிள்ளையார்களை உடைத்தாலும், யார் கவலைப்படப் போகிறார்கள்? மேம்போக்கான எதிர்ப்பு ஏற்பட்டு பத்திரிகைப் பிரச்சாரத்தோடு போய்விடும் அப்படித்தான்முன்னெல்லாம் நடந்தது.

இது தேர்தல் சமயம். ஆதலால பெரியாரின் செய்கையால் தி மு க. வும் அதன் கூட்டணியும் பெரும் பீதியுற்று, தன்னைக் காப்பாற்றிக்க, எங்கெங்கெல்லாமோ ஓடித் தஞ்சமடைகின்றன.

12—2—71—ல் இராமநாதபுரம் பொதுக்கூட்டத்தில் கருணாநிதி பேசுகையில் இந்த பீதி வெளிப்பட்டது.

தான் ஒரு நாஸ்திகர் அல்ல என்பதை விளக்குவதற்காக அவர் படாதபாடு பட்டிருக்கிறார். அவர் பேசுகிறார்!

### நானா நாஸ்திகன்?

''நாங்கள் நாஸ்திகர்கள் அல்ல கும்பகோணம் மகாமகத்தின்போது குழாய் போட்டுக் கொடுத்த நாங்களா நாஸ்திகர்கள்? மைலாப்பூர் கபாலீஸ்வரர் கோவில் திருக்குளத்தை சிரமதானப்படையோடு சேர்ந்து தோண்டினேனே, நாங்களா நாஸ்திகர்கள்? நான் தெப்பக்குளத்தைத் தோண்டுகிற போது உண்டியல் அல்லவா வந்தது நான் நாஸ்திகனாயிருந்தால் பாம்பு அல்லவா வந்திருக்கும்; நான் வெட்டத்தொடங்கியதும், தெப்பம் நிரம்பி விடும் அளவுக்கு மழை பெய்ததிலிருந்தே நாங்கள் நாஸ்திகர்கள் அல்ல என்பது தெரியவில்லையா?'' என்று ''விஞ்ஞான'' ரீதியாக ''விளக்கங்கள்'' உதிர்த்திருக்கிறார்.

அது மட்டுமா? குருவாயூரப்பன் கோவிலுக்கு குண்டுச் சம்பா அனுப்பினேனே, அங்காளம்மன் கோவிலுக்கு பொங்கல் வைத்து கும்பிட்டேனே, திருத்தணி முருகனுக்கு திருப்பணி செய்தேனே,

காமராஜாலும் ஓட்ட முடியாத திருவாரூர்த் தேரை, கருணாநிதியல்லவா ஓட வைத்தேன்! ...... இப்படி எத்தனையோ, கதை வசனங்களைப் பேச ஆரம்பித்து விட்டார்.

சிண்டிகேட்டு கூட்டணி திடீர்ப் பிள்ளையார் விவகாரத்தைப் பிடித்ததிலிருந்து- சிவம் முருகன், ராமன் வரையும் பிடித்து —மத உணர்ச்சிகளைத் தூண்டிவிடுகிறது.

### திசை திருப்புகிறார்கள்

தி. க. தலைவர் ஈ. வே. ரா. வும் சரி, தி. மு. க. தலைவர் கருணாநிதியும் சரி, சிண்டிகேட் காங்கிரஸ தலைவர் காமராசரும் சரி— எல்லாருமே நாட்டு மக்களை வாட்டி வதைத்துக் கொண்டிருக்கும் பிரச்னைகளைப் பற்றுக் கவலைப்படவில்லை. காமராசரும் கருணாநிதியும் அகிலை ஏழைகளின் அநியாயத்தைப் பார்க்கவில்லை.

கஷ்டப்படும் ஏழைகளின் கடன் சுமையைத் தீர்க்கவில்லை.

வேலை கிடைக்காத வேதனையைப் பார்க்கவில்லை.

உச்சவரம்பென்று சொல்லி ஊரே தமுக்கடித்து, உழுபவர்க்குக் கொடுக்க மிச்ச நிலம் இல்லை என்றவர்கள்!

கட்டணத்தைக் கூட்டியவர்! கடும் வரியைச் சுமத்தியவர்!

மக்களை வாட்டி வதைக்கும் பிரச்னைகள் இப்படி எத்தனையோ இருக்கின்றன. இவற்றையெல்லாம் பார்க்காமல்— தீர்க்காமல்—ஒரு நயா பைசாவுக்கு லாயக்கு இல்லாத—ஏழை மக்களுக்கு எள்ளுமுக்கு அளவுகூட நன்மையளிக்காத—அற்பபிரச்சினைகளில் காட்டா குஸ்தி போட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

மக்கள் தங்கள் பிரச்னைக்குப் போராடாதபடி— எது எதற்கோ; யார் யாருக்கோ கொடி தூக்கவும் குத்துவெட்டு நடத்தவும் ஆன பாதையில் திசை திருப்பிக்கொண்டிருக்கிறார்களே இந்தப் பெருந் தலைவர்களும் பேரறிஞர் தம்பிகளும் பெத்தப்பெரியார் கரம்!

உழைப்பாளி மக்களும் அறிவாளிகளும் காலாகாலத்தில் கண்விழித்து— அரிவாள் சுத்தியல் நட்சத்திரத்தைப் பார்க்க வேண்டாமா?

## நமது வெளியீடுகள்

| | |
|---|---|
| அமைப்புச்சட்டம் | 0—25 |
| கட்சித் திட்டம் | 1—00 |
| இன்றைய அரசியல் நிலைமை | 0—40 |
| இந்திய அரசும் மார்க்சிஸ்ட் கட்சியும் | 0—10 |
| இந்தியக் கம். கட்சிக்கும், சீனக்கம். கட்சிக்குமிடையே உள்ள வேறுபாடு | 0—40 |
| செக்கோஸ்லாவாக்கியாவில் நடந்தது என்ன | 0—25 |
| இடதுசாரிதிரிபு ஏன்? மத்தியக் கமிட்டியின் ஆய்வுரை | 0—30 |
| இடதுசாரி திரிபு அல்லது இடதுசாரி சந்தர்ப்பவாதம் | 0—40 |
| வலதுசாரிகளின் வர்க்க சமரச பிளவு வேலைகளை— முறியடிப்போம் | 0—10 |
| அ. இ. தொ. ச. கா. வை பிளவுபடுத்துவது யார்? | 0—10 |
| வலதுசாரிகளின் தடுமாற்றம் | 0—15 |
| குட்டி முன்னணியின் துரோக வரலாறு | 0—20 |
| ஜோதிபாசு கடிதம் | 0—05 |
| புதிய ஜனநாயகம் | 0—50 |
| வியட்நாம் வீராங்கனை | 0—75 |
| லெனின் நூற்றாண்டுகள் —ரணதிவே | 0—30 |
| ஹோசிமின் | 0—25 |
| இ. எம். எஸ். வாழ்க்கை வரலாறு | 0—50 |
| நான் என்றும் மக்கள் ஊழியனே—ஏ. கே. ஜி. சுயசரிதம் | 1—50 |
| விவசாய சங்க அரங்கில் நமதுகடமைகள் | 0—25 |
| தி. மு. க. அரசும் விவசாயிகளும் | 0—10 |
| மொழிச் சிக்கலைத் தீர்க்கும் வழி | 0—10 |
| மொழிப்பிரச்சனையில் மார்க்சிஸ்ட் நிலை | 0—15 |
| யாருடைய கொள்கைக்கு வெற்றி | 0—10 |
| சிவசேனையும் காங்கிரசும் | 0—10 |
| ஆந்திராவில் காங்கிரஸ் வெறியாட்டம் | 0—05 |
| தமிழ் இலக்கியம் கூறும் வர்க்க சமுதாயம் | 0—80 |
| செவ்வானம் நாடகம் | 1—00 |
| ஹோசிமின் படம் | 0—15 |
| பி. ராமமூர்த்தி படம் | 0—15 |
| வலது கம்யூனிஸ்டுகள் இண்டிகேட்டின் கைப்பாவை—சுந்தரய்யா | 0—10 |
| அரசியல் தீர்மானம் | 0—30 |
| உழைக்கும் மக்களின் உலகம் அமைப்போம் —ஸ்டாலின் | 0—10 |
| கடவுள் உண்டா? இல்லையா? | 0—10 |
| குத்தகை பதிவு சட்டம் | 0—25 |
| தேர்தல் வாக்குறுதி என்ன? | |
| தி. மு. க. நடைமுறை என்ன? | 0—05 |

தபால், பார்சல் செலவை புத்தகம் வாங்குவோர் ஏற்கவேண்டியது

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)
தமிழ் மாநிலக் குழு
13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1



புரட்சிக் கலைஞரின்

# மக்கள் விரோதக்குரல்!

''கோவையில் விவசாயிகள் சுடப்பட்டது ஏன்? சில நூறு போலீஸ்காரர்களை ஆயிரக்கணக்கான விவசாயிகள் தாக்கினர் — தற்காப்புக்காகப் போலீசார் சுட்டனர், போலீசார் தாக்கப்படும்போது, அவர்களுக்குத் தற்காப்பு வேண்டாமா?'' தினமலர் 14—2—71

இவ்வாறு போலீஸுக்கு விசுவாசமாகப் பேசியிருப்பது யார் தெரியுமா?

'புரட்சி நடிகர்!', 'மக்கள் திலகம்' என்றெல்லாம், சிறப்பு அடைமொழி பெற்றுள்ள தி. மு. க, கலைஞர் நடிகர் திரு. எம். ஜி, ராமசந்திரன் தான்!

பிப்ரவரி 13ம் நாள் சென்னையில் நடைபெற்ற பொதுக்கூட்டமொன்றில்தான் இவ்வாறு அவர் கூறியுள்ளார்.

மின்சார கட்டணத்தைக் குறைக்கக்கோரி, கோவை விவசாயிகள் அமைதியாகப் போராடுகையில் அவர்களின் மண்டைகளை குண்டாந்தடியால் அடித்து நொறுக்கவும், நான்கு விவசாயிகளை சுட்டுக்கொல்லவும் போலீசுக்கு அப்படியென்ன ஆபத்து வந்துவிட்டது? போலீசுக்கு எதிராக விவசாயிகள் எந்த ஒரு ஆபத்தையும் ஏற்படுத்தாதபோது ''தற்காப்புக்காகத்தான் போலீஸ் சுட்டது'' என்ற மக்கள் திலகம் எம். ஜி. ஆர். கூறுவதில் உண்மை என்ன இருக்கமுடியும்?

பூந்தாழங்குடியிலும், திருவொற்றியூரிலும், நெய்வேலியிலும் கூலி உயர்வு கேட்டுப் போராடிய தொழிலாளர்களை போலீஸ் சுட்டுக்கொன்றதே-அதுவும் தற்காப்புக்காகத்தானா? நெய்லேவியில் பச்சிளங்குழந்தையை அடித்துக் கொன்றதும் தற்காப்புக்காகத்தானா?

வீட்டுவரி உயர்வைக் குறைக்கக்கோரி போராடிய தென்காசி மக்கள் மீது சுட்டு ஒருவரை போலீஸ் கொன்றதே — அதுவும் தற்காப்புக்காகத் தானா?

போராடும் மக்கள் மீது போலீஸ் சுடுவதை தற்காப்புக்காகத்தான் என்று எம். ஜி, ஆர் கூறுவது. காமராஜருடைய பக்தவத்சலத்துடைய குரல் போலல்லவா உள்ளது? மக்கள் திலகத்தின் குரல் மக்கள் குரலாக இல்லையே? மக்களுக்கு எதிராகச் செயல்படும் ஒரு ஆட்சியை ஏன் நியாயப்படுத்த இறங்குகிறார்?

அதனால்தான் மக்கள் நலனுக்கே — தொழிலாளி நலனுக்கே — விருப்பத்திற்கே எதிராகப் பேசவேண்டிய நிலையில் வைக்கப்பட்டுள்ளார்! அந்தோ! 'மக்கள் திலகம்'!

## திசை திருப்புவது ஏன்?

''பெருந் தலைவர் காமராசர் தமது சமையற்காரர் வைரவனுக்கு நடந்த திருமணத்திற்கு தமது பெயரில் அழைப்பு விடவில்லையா? காங்கிரஸ் கட்சி ஆண்டபோது ஒரு அமைச்சர் திருமணம் செய்துகொள்ளவில்லையா'' என்று முரசொலி 14—2—71-ம் தேதி இதழில் பெட்டிச் செய்தி வெளியிட்டுள்ளது.

சிண்டிகேட்டுக்குப் பதிலளிப்பதின் பெயரில் மக்கள் முன்னுள்ள உண்மையான பிரச்னைகள் மறைக்கப்படுகின்றன. இம்மாதிரிச் செய்திக்குத்தான் தி மு. க. ஏடுகளிலும் முக்கியத்துவம் கொடுக்கப்படுகின்றன.

எந்தக் காங்கிரஸ் கொள்கைகளை எதிர்த்து 1967-ல் தி. மு. க. மக்களிடம் ஓட்டு வாங்கியதோ அந்தக் காங்கிரஸ் கொள்கைகளை இப்போதும் தி. மு. க. எதிர்க்கத் தயாரா? இல்லை.

காங்கிரஸ் கொள்கைகளுக்கு எந்த மாற்று கொள்கைகளை இப்போது தி. மு க முன் வைக்கிறது? மாற்றுக் கிடையாது அதனால்தான் தி மு. க.வும, சிண்டிகேட்டும் தனி நபர் தாக்குதல்களில் வெகு தீவிரம் காட்டுகிறார்கள்—தங்களது மக்கள் விரோதத் தன்மைகளை மூடி மறைக்க!

## கேரள அரசு ஊழியர்போராட்டம்
### கூட்டணிக் கட்சிகளுக்குள்ளே குத்து வெட்டு

திருவனந்தபுரம், பிப். 14— கேரள என். ஜி. ஓ. களும் ஆசிரியர்களும் ஏனைய அரசு ஊழியர்களும் கடந்த ஐந்து தினங்களாகப் போராடி வருகிறார்கள். மிகுந்த கட்டுப்பாட்டுடன் இந்தப் போராட்டம் நடந்து வருகிறது, இதனை உடைக்க வலது கம்யூனிஸ்டு அச்சுதமேனன் எவ்வளவோ முயற்சி பண்ணிப்பார்க்கிறார் ''தேர்தலையே ஒத்தி வைத்து விடுவேன்'', என்று மிரட்டுகிறார், கருங்காலிகளைக்கண்டு பிடித்து வேலைநிறுத்தத்தை உடைக்க முயற்சி செய்கிறார்.

இத்தனை சாகசங்கள் புரிந்த போதிலும் என். ஜி. ஓக்கள் கட்டுப்பாடுடன் போராடி வருகிறார்கள். அதே சமயத்தில் இப்போராட்டத்தை எவ்வாறு சமாளிப்பது என்பதுபற்றி கூட்டி முன்னணிக் கட்சிகளிடையேயும் காங்கிரஸ் கட்சியிலும் கருத்துவேற்றுமை பகிரங்கமாக வெளிவர ஆரம்பித்து விட்டது.

இந்திரா காங்கிரஸ் தலைவர் கே. கே விஸ்வநாதன், இந்த போராட்டத்தைச் சமாளிக்கும் சக்தி அச்சுதமேனன் அமைச்சரவைக்கு இருக்கிறதா என்று தனக்கு சந்தேகமிருப்பதாகக் கூறியுள்ளார் சீக்கிரமே அச்சுதமேனன் அமைச்சரவை ராஜினாமா செய்ய வேண்டிய சூழ்நிலை உருவாகி வருவதாகப் பகிரங்கமாக அறிவித்துள்ளார்.

அவ்வாறு, அச்சுதமேனன் அமைச்சரவை ராஜினாமா செய்தால் ''யார் அடுத்த அமைச்சரவை அமைப்பது?'' என்று கேட்டதற்கு 'அது பற்றி தனக்கு ஒன்றும் தெரியாது'' என்றார்.

இதிலிருந்து கேரள அமைச்சரவைக்கு உள்ளூரவே பெரும் குழப்பம் உருவாகி வருகிறது என்பது வெளிப்படுகிறது.

### குஜராத்திலும் அரசு ஊழியர் போராட்டம்.

அகமதாபாத்: பிப், 13— இடைக்கால நிவாரணம் கோரும் தங்களது கோரிக்கையை, 1 வருக்குள் வழங்கவில்லையென்றால் பிப் 20 முதல் காலவரையற்ற போராட்டத்தில் இறங்கப் போவதாக குஜராத் மாநில அரசு ஊழியர் தலைவர் அறிவித்துள்ளார்.

# உங்கள் வாக்கு
# அரிவாள் சுத்தியல் நட்சத்திரத்திற்கே!



தோழர்
**ஏ. நல்லசிவன்**
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)
மாநிலக்குழு உறுப்பினர்
அம்பாசமுத்திரம்தொகுதி வேட்பாளர்



தோழர்
**பி. ராமமூர்த்தி**
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)
பொலிட்பீரோ உறுப்பினர்
மதுரை நாடாளுமன்றத் தொகுதி வேட்பாளர்



தோழர்
**ராமய்யன்**
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)
உறுப்பினர்
வேதாரண்யம் தொகுதி வேட்பாளர்

# சட்ட மன்றத்தில் மார்க்சிஸ்ட் கட்சியின் குரல்



மாயூரம் நாடாளுமன்றத் தொகுதி வேட்பாளர்

## பி. எஸ். தனுஷ்கோடி பேசியது ★

### ஊராட்சி மன்றங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும்

''ஊராட்சி மன்றங்களில் குளங்களுக்கு காவல் போடுவதற்கு ஒரு அலுவலருக்கு 10 ரூபாய் கொடுக்க வேண்டுமென்றாலும், மாவட்ட ஆட்சியாளரிடமிருந்து அதிகாரம் பெற்றே செய்யவேண்டியிருக்கிறது, அவர்களுடைய உத்தரவு வருவதற்கு பலநாட்களாகின்றன. சம்பளம் கொடுக்கப்பட்டாலும் ஆட்சேபணைகள் வருகின்றன இதுபோன்ற சிறு காரியங்களையாவது ஊராட்சிகள் செய்துகொள்வதற்கு அதிகாரம் உடனடியாக வழங்கப்பட வேண்டும்''

(1968 மார்ச்சில் சட்டமன்றத்தில் பேசியது)

### சமுதாயநல வளர்ச்சித் திட்டங்களுக்கு தனி இலாகா வேண்டும்

''இன்றைய தினம் நாடு பூராவும் ஒரு பீதி நிலவுகிறது. சமுதாய நல வளர்ச்சித்திட்ட வேலைகள் ரெவின்யூ இலாகாவிடம் ஒப்படைக்கப்படவிருக்கின்றன என்கிறார்கள். இப்படி இருந்தால் சமுதாய வளர்ச்சித் திட்டங்களினால் பயன் ஏற்படாது போய்விடும். எப்படி கால்நடை இலாகாவிற்குத் தனி இலாகா செயல்படுகிறதோ, அதுபோல சமுதாய நல திட்டத்திற்கும் தனி இலாகா அவசியம். ஆகவே ரெவின்யூ இலாகாவுடன் சேர்க்கின்ற யோசனை இருக்குமானால் அதைக் கைவிட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்''

(1968 மார்ச்சில் சட்டமன்றத்தில் பேசியது)

### தனியார் ஆக்கிரமிப்பு

''பஞ்சாயத்திடம் ஒப்படைக்கப்பட்ட புறம்போக்கு நிலத்தை தனியார் ஆக்கிரமித்திருக்கிறார்கள். அந்த ஆக்கிரமிப்பை அகற்ற வேண்டுமென்ற ரெவின்யூ அதிகாரிகளிடத்தில் சொல்லியும் யாதொரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. அதனால் விவசாயப் பெருங்குடி மக்கள் களம் இல்லாது ரோடில் போட்டுக்கொண்டு தானியங்களை அடிக்கிறார்கள். இதுபோன்ற தனியார் ஆக்கிரமிப்பு எங்கு இருந்தாலும் அவை உடனடியாக அகற்றப்பட நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்''

(1968 மார்ச்சில் சட்டமன்றத்தில் பேசியது)

### வீண் விரயங்களை தவிர்க்கவேண்டும்

''சமூகக் கல்வி நிலையங்கள் இருக்கின்றன அவற்றில் பல கிராமங்களில் செயல்படவே இல்லை அதற்ாகச் செலவழிக்கக்கூடிய தொகையை வேறு மாற்று அபிவிருத்தித் திட்டங்களுக்கு ஒதுக்கலாம் என்று கூறிக் கொள்கிறேன். தையற் கலைக்காக ஆயிரக்கணக்கான, லட்சக்கணக்கான ரூபாய்கள் செலவழிக்கப்படுகின்றன. எந்தப் பஞ்சாயத்திலும் தையற் கலை நடக்கவில்லை பல இடங்களில் மிஷின்கள் தூங்கிக்கொண்டிருக்கின்றன. ஆகவே, அதற்காகச் செலவழிக்கின்ற ரூபாயை மாற்று அபிவிருத்தி வழிகளில் செலவழிக்க வேண்டும். கால்நடை வளர்ச்சியிருக்கிறது. அது நல்ல முறையிலே செயல்பட வேண்டுமென்றால் விரயமாக செலவழிக்கப்படுகின்ற பணத்தை இதற்கு செலவழிக்கலாம். கிராமப்புறத்தில் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிற மக்கள் வைத்திய வசதி இல்லாமல் அதற்காக நகரப் பகுதிகளுக்கு வேலைக்காக போகவேண்டியிருக்கிறது. ஆகவே அப்படியில்லாமல் கிராமப்புறங்களில் அவர்கள் மருத்துவ வசதியைப் பெறக்கூடிய வகையில் மருத்துவ மனைகள், தாய், சேய் நல விடுதிகள் ஏற்படுத்த முன்வரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன் அப்படிப்பட்ட தொகைகளை முனிசிபாலிட்டிகளுக்கும் ஒதுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன் சாக்கடைகள் நாற்றமெடுத்து அவை வியாதிகளை ஏற்படுத்தக் கூடிய நிலைமை இருப்பதால், முனிசபாலிட்டிகளை நல்லமுறையில் வைத்திருக்கவேண்டிய முறையில் அந்தத் தொகையை பயன்படுத்தலாம் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.''

(1968—மார்ச்சில் சட்டமன்றத்தில் பேசியது)

### குடியிருப்பு மனை தருக

தஞ்சை மாவட்டத்தில் இருக்கக்கூடிய விவசாயத் தொழிலாளர்கள் பெரும் நிலப் பிரபுக்களுடைய சொந்தமனையிலேயே குடியிருந்து வருகிறார்கள் அவர்கள் இந்த நிலப் பிரபுக்களின் சொந்த வேலையில் தொடர்ந்து இருக்கவில்லை என்று சொன்னால் எந்தநேரத்திலும் அவர்கள் குடியிருக்கக் கூடிய மனைக்கு ஆபத்து ஏற்படக்கூடிய நிலை இருக்கிறது. ஆகவே அப்படி வெளியேற்றப் படக்கூடிய நிலையில் இருக்கும் விவசாயத் தொழிலாளர்களுக்கு குடியிருப்பு மனைகளைச் சொந்தமாக்குவதற்கு இந்த அரசு ஒரு புதிய சட்டத்தை கொண்டுவரவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன், (சட்டமன்றத்தில் 9—3—69ல் பேசியது,

### 75 சதம் வாரம்தருக

குத்தகை செய்யக்கூடிய சாகுபடிகாரர்களுக்கு திட்டக் கமிஷன் கூறியதை ஏற்றுக் கொண்டு 75 சதவிகிதம் வாரம் கொடுக்கவேண்டும் என்ற அளவில் வகை செய்வதற்கு சட்டத்தை திருத்த வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

### சின்னப்பிள்ளை எங்கே?

இருஞ்சூர் கிராமத்தில் பின்னப்பிள்ளை என்ற ஒரு தாழ்த்தப்பட்ட மகன் அந்தக் கிராமத்திலுள்ள கோபால கிருஷ்ண நாயுடு என்ற நிலப் பிரபுவினால் கடத்தப்பட்டு இன்றைய தேதி வரையில் அவர் கண்டுபிடிக்கப்படவில்லை அவர் கொலை செய்யப்பட்டிருக்கிறார். ரத்தக் கறை தோய்ந்த துணிகள் காட்டப்பட்டும் எந்த விதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. அந்தக் கிராமத்தில் தாழ்த்தப் பட்டவர்கள் குடியிருக்கும் குடியிருப்புகள் பிய்த்து எரியப்பட்டிருக்கின்றன. அந்தச் சிறுவன் அரிஜன் எங்கே இருக்கிறார் என்பது இன்னும் தெரியவில்லை (9—3—69—ல் சட்ட மன்றத்தில் பேசியது.)

# கண்ணோட்டம்

## எத்தனைகாலம்தான் ஏமாற்றுவீர்

### இந்த நாட்டினை?

"காங்கிரஸ் இதுவரை மூன்று ஐந்தாண்டு திட்டங்களை நிறைவேற்றியும்கூட பணக்காரர்கள் மேலும் மேலும் பணக்காரர்களானார்கள்; ஏழைகள் ஏழைகளானார்கள். இந்நிலை மாற முற்போக்குக் கூட்டணியை ஆதரிக்க வேண்டும்" — (முரசொலி 11—2—71)

என்று கருணாநிதி அம்பாசமுத்திரத்தில் பேசியிருக்கிறார்!

ஏழை மேலும் ஏழையாவதையும் பணக்காரன் மேலும் பணக்காரன் ஆவதையும் தடுக்கப்போவதாகக் கூறும் கருணாநிதி— அதைத் தன்னிடமுள்ள திட்டம் என்னவென்று சொல்லியிருந்தால் பரவாயில்லை! சரக்கின் முறுக்கை நாமும் பார்த்திருக்கலாம்!

காங்கிரசின் மூன்று ஐந்தாண்டு திட்டங்களுக்குப் பிறகும் ஏழை மேலும் ஏழையாகிக் கொண்டிருக்கிறான்; பணக்காரன் மேலும் பணக்காரன் ஆகிக் கொண்டிருக்கிறான் என்றால் அதற்குக் காரணமென்ன?

ஏகபோக முதலாளிகள், பெரு நிலப்பிரபுக்கள், அந்நிய முதலாளிகள் ஆகியோரின் பகாசுரக் கொள்ளைக்கு பாதுகாவலாய் நின்று — முதலாளித்துவப் பாதையினை காங்கிரஸ் கடைபிடித்து வருவதானே காரணம்?

அந்த காங்கிரசின் பாதைக்கு 'மாற்றுப் பாதை'யாக கருணாநிதி காட்டும் 'பாதை' என்ன? காங்கிரசின் திட்டத்திற்கு 'மாற்றுத் திட்டம்' ஏதேனும் கழகத்திற்கு உண்டோ? இல்லையே! அது மட்டுமல்ல!

எந்தக் காங்கிரசின் கொள்கையினால் நாட்டிலுள்ள ஏழைகள் மேலும் மேலும் ஏழைகள் ஆகிக்கொண்டிருக்கிறார்களோ — அதே காங்கிரசுடன் கைகோர்த்து நிற்கும் நிலைக்கு கருணாநிதி வந்துவிட்டார்.

எனவே—காங்கிரசின் பாதையிலேயே ஆட்சி நடத்தும் கருணாநிதி—ஏழை மேலும் ஏழையாவதைத் தடுக்கப் போவதாக சொல்வதெல்லாம் — ஓட்டுக்காக அவிழ்த்து விடும் சரடுதானே தவிர வேறில்லை! அதற்கு சான்றாக— கடந்தகால கழக ஆட்சியின்போது நடந்த ஒரே ஒரு விஷயத்தைச் சுட்டிக்காட்டினால் போதுமானது

- மின் கட்டணத்தை 10 பைசாவிலிருந்து 9 பைசாவாகக் குறைக்க வேண்டுமென்று கோரி கோவை விவசாயிகள் போராடினார்களே! அதற்கு தி. மு. க. அரசு உடனே இணங்கியதா? இல்லை! நான்கு விவசாயிகளை பெருமாநல்லூரில் சுட்டுப் பொசுக்கிய பின்னர் தான்— வேறு வழியின்றி ஒரு பைசாவைக் குறைக்க கருணாநிதியின் காரியம் அரசு சம்மதித்தது.
- ஆனால் பெரு முதலாளிகளில் ஒருவரான வெங்கடசாமி நாயுடுவிற்கு சொந்தமானது மேட்டூர் அலுமினியத் தொழிற்சாலை! அதற்கு ஆண்டு தோறும் 1 கோடி ரூபாயை மின்சார மானியமாக தமிழக அரசு அளித்து வருகிறது!
- ஒரு பைசாவைக் குறைக்க மறுத்து—4 பேரைக் கொன்று பலிவாங்கிய கழக ஆட்சி - பெருமுதலாளி வெங்கடசாமி நாயுடுவுக்கு ஆண்டுதோறும் 1 கோடி ரூபாயை மின்சார மானியமாக அளித்தது! அளித்து வருகிறது!

திரு கருணாநிதி அவர்களே இதுதான் ஏழை மேலும் ஏழையாவதைத் தடுக்கும் நடைமுறையா?

இதுதான் பணக்காரன் மேலும் பணக்காரன் ஆவதைத் தடுக்கும் போக்கா?

காங்கிரசின் பாதையிலிருந்து இது எந்த வகையில் மாறுபட்டது?

கருணாநிதி அவர்களே! இன்னும் எத்தனை காலம் ஏமாற்றுவீர் இந்த நாட்டினை!

## தோழர் பி. ஆர். பேசியது

### டேப்ரிக்கார்டில்

மதுரை பிப். 13— மதுரை 11-வது வார்டு கம்யூனிஸ்ட் கட்சியின் தேர்தல் பொதுக்கூட்டம் பரமசிவம் இன்னிசைக்கச்சேரியுடன் நடைபெற்றது. கூட்டத்திற்கு காஜா மைதீன் தலைமைதாங்கினர்.

கிழக்குத் தொகுதி அபேட்சகர் வி வீரபத்திரன் நகரசபையில் தி மு க. உறுப்பினர் நடந்துகொண்ட முறையை விளக்கிப் பேசினார். மற்றும் எம். ராஜாங்கம், ஐ. மாயாண்டிபாரதி இன்றைய தேர்தலின் முக்கியத்துவத்தை பற்றி பேசினார்கள்.

தோழர் பி. ராமமூர்த்தி அவர்களின் ஜனவரி 31-ம் நாள் பேசிய பேச்சின் டேப்ரிக்கார்டு ஒலிபரப்பப்பட்டது. அதில் முஸ்லீம் மக்களுக்காக நமது கட்சியின் சேவையும் முஸ்லீம் லீக் தலைவர்களின் கொள்கையை விமர்சனம் செய்ததில், பெரும்பகுதி பெண்கள் இன்று தானே உண்மை தெரிகிறது என்று பேசினார்கள். முஸ்லீம் லீக் கடந்தகால கொள்கை என்ன செய்தது என்பதை

பி. ராமமூர்த்தி பேசியதை டேப்ரிக்கார்டுவை கேட்டதற்குப் பின் முஸ்லிம் மக்களிடையே மார்க்சிஸ்ட் அபேட்சகர்களுக்கு ஆதரவு பெருகி வருகிறது.

## ஸ்ரீவைகுண்டத்தில் மின் தொழிலாளர் கூட்டம்

ஸ்ரீவைகுண்டம், பிப் 10— தமிழ்நாடு மின்சாரத் தொழிலாளர் மத்திய அமைப்பின் கொடியை ஸ்ரீவைகுண்டம் மின் அலுவலகம் முன் பிப் 7-ம் தேதி சங்கத்தின் மூத்ததொண்டரும், சுதந்திரப் போராட்ட தியாகப் பரம்பரையில் வந்தவருமான டி. பி. வாசுதேவன் கொடி ஏற்றிவைத்தார்.

வ. உ. சி. திடலில் மாலையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர் முருகேசன் தலைமைதாங்கினர். தோழர்கள் பி.சி. வேலாயுதன், ராஜாமணி, சிவஞானம், வெங்கடராமானுஜலு, பரமசிவன், வாசுதேவன் மற்றும்பலர் பேசினர்கள். கூட்டத்தில் ஸ்ரீவைகுண்டம் பகுதிக்குரிய தேர்தல் நிதி கொடுக்கப்பட்டது. தோழர் அ. கந்தசாமி நன்றி கூறினார்.

# 15 ஆயிரம் பட்டதாரி ஆசிரியர்கள் ஊர்வலம்!

## பிப்ரவரி 25 அன்று மாநிலம் தழுவிய போராட்டம்!

திருச்சி, பிப். 14— திருச்சி நகரில் இன்று கூடிய பட்டதாரி ஆசிரியர்கள் மாநாடு— தங்களது ஊதிய விகிதத்தை திருத்தியமைக்க வேண்டுமென்று கோரி பிப்ரவரி 25 அன்று மாநிலம் தழுவிய அளவில் பெருந்திரளான 'கேசுவல்' லீவு போடுவது என்று தீர்மானித்துள்ளார்கள்.

இன்று இம்மாநாட்டினை ஒட்டி நடைபெற்ற மகத்தான ஊர்வலத்தில் 15 ஆயிரத்திற்கும் மேற்பட்ட ஆசிரியர்கள் கலந்துகொண்டார்கள். ஆயிரத்திற்கும் மேற்பட்ட ஆசிரியைகள் கலந்துகொண்டு உணர்ச்சி மிக்க கோஷங்களை முழங்கிவந்தது எழுச்சியூட்டுவதாக இருந்தது.

"ஆசிரியர்களுக்கு அரசியலில் பங்குகொள்ளும் உரிமை வேண்டும்" என்றும்— "ஊதிய விகிதத்தைத் திருத்தி அமைக்க வேண்டும்" என்றும்— வேறு பல கோஷங்களையும் ஓங்கி ஒலித்தனர்.

திருச்சி நகரத்தையே அதிர வைக்கும் அளவிற்கு மிகப் பிரம்மாண்டமான ஊர்வலமாக இது அமைந்தது என்று சொன்னால் அது மிகையில்லை. அந்த அளவிற்கு சிறப்பும் மிக்க ஊர்வலமாக இது நிகழ்ந்தது.

பட்டதாரி ஆசிரியர்கள் தங்களது கோரிக்கைகளை வென்றெடுக்க ஒன்றுபட்டு விட்டார்கள் என்பதற்கு ஊர்வலம் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தது.

மாலையில் நடைபெற்ற மாநாட்டில் ஆசிரியர் பிரதிநிதிகளும் அனைத்துக் கட்சியின் சார்பில் தோழர் பாப்பா உமாநாத்தும், தி மு க சார்பில் அமைச்சர் க. அன்பழகன் அறிவுடை நம்பியும் சிண்டிகேட் சார்பில் சம்பத்தும் பேசினர்!

"தங்களது கோரிக்கைகளை வென்றெடுப்பதற்காக போராட முன்வந்துள்ள பட்டதாரி ஆசிரியர்களின் போராட்டத்திற்கு விவசாயிகளும், தொழிலாளிகளும் தங்களது ஆதரவினைக் கொடுப்பார்கள். போராட்டத்தின் மூலமே முன்னேற முடியும்" என்று தோழர் பாப்பா உமாநாத் குறிப்பிட்டார்.

ஆசிரியர்களின் போராட்ட முடிவினை ஆதரித்துப் பேசியவர்களுக்கு ஆசிரியர்கள் தங்களது வரவேற்பைத் தெரிவித்துக் கொண்டார்கள்! அதே சமயத்தில், அவர்களது போராட்ட உணர்வினை மழுப்படிக்க முயன்றவர்களை சிண்டலும் கேலி செய்தனர்!

ஊதியக் குழுவின் பரிந்துரைகள் மீது தங்களது அதிருப்தியைத் தெரிவித்துக் கொள்ளவும், ஊதிய விகிதங்களை திருத்தி அமைக்கவேண்டுமென்று கோரியும் பிப்ரவரி 25 அன்று மாநில தழுவிய அளவில் பெருந்திரளாக் கேசுவல் லீவு போடுவது என்று தீர்மானித்துள்ளனர்.

## போராட்டத்தை நீடிப்பதும் நிறுத்திக் கொள்வதும் போராடும் ஊழியர்களின் முடிவே!

### இ. எம். எஸ். விளக்கம்

மதுரை, பிப் 14— "கேரள அரசு ஊழியர்களின் போராட்டம் சமரசமாக முடிவடையாமல் நீடிப்பதற்குக் காரணம், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்புள்ள ஊழியர்கள் சமரசத்துக்கு உடன்பட மறுப்பதுதான் காரணம் என்றும் மார்க்சிஸ்ட் அல்லாத கட்சிகளின் சார்பு உள்ள ஊழியர்கள் சமரசத்தை நாடுவதாகவும், அதன் பேரில் பிளவு ஏற்பட்டிருப்பதாகவும் பத்திரிகைகளில் செய்தி வந்திருக்கிறதே அது பற்றி தங்கள் கருத்துஎன்னஎன்று 14—2—71 அன்று மதுரை வந்திருந்த தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபட் அவர்களிடம் பத்திரிகை நிருபர்கள் கேள்வி கேட்டார்கள்.

#### சமரசத்தையே நாடுகிறோம்

தோழர் — இ. எம். எஸ். இது பற்றி விளக்கமான பதில் அளித்தார்.

அதாவது:—

"அரசு ஊழியர் போராட்டமாயினும் சரி, அல்லது முதலாளிகளிடத்தில் பணி புரியும் தொழிலாளர் போராட்டமாயினும் சரி, அப்போராட்டங்கள் குறித்து எங்கள் கட்சியின் நிலை சமரச உடன்பாடு காண்பது தான்.

ஒவ்வொரு தொழிற் சங்க போராட்டமும் கூட்டுபேரம் நடத்தி சரியான முறையில் உடன்பாடு காண்பதுதான் எங்கள் கட்சியின் நிலையாகும் முடிந்த மட்டும் சமரச உடன்பாடு காணும் படிதான் நாங்கள் எங்கள் ஆட்களுக்கு சொல்லுகிறோம்.

சமரசமாகப் போகவேண்டுமா? போகவேண்டுமா?— என்பதல்ல பிரச்னை; எந்த நிபந்தனைகளில் சமரசம் ஏற்படுவது என்பது தான் பிரச்னையாகும்.

பிரச்னை என்ன? அரசு ஊழியர்கள் 9 கோடி ரூபாய் கேட்கிறார்கள்.

அச்சுதமேனனோ 4 கோடி ரூபாய்தான் தரமுடியும் என்றார் அதற்குமேல் எதுவும் தருவதற்கில்லையென்று திட்டவட்டமாகச் சொல்லி விட்டார்.

அதன் பிற்பாடுதான், அரசு ஊழியர்களின் பலவேறு சங்கங்களும் இணைந்துள்ள கூட்டுச் செயல் குழு கூடி, அரசாங்க முடிவை ஏற்க முடியாது என நிராகரித்து விட்டது.

இந்த முடிவை கூட்டு செயல் குழு ஏகமனதாக எடுத்தது.

முதலமைச்சரோ தான் கூறும் நிபந்தனைகளின் அடிப்படையில் உடன்பாடு ஏற்பட வேண்டுமென்று வற்புறுத்துகிறார்.

எந்தவொரு முதலாளியும் தான் கூறும் நிபந்தனையின் அடிப்படையில் உடன்பாடு காண விரும்புவார்.

#### நாங்கள் தலையிடவில்லை

இது பற்றி எங்கள் கட்சி தலையிடவில்லை. அரசு நிபந்தனையை ஒத்துக் கொள்ளுவதா கூடாதா என்பதை முடிவு செய்ய வேண்டியது கூட்டுச் செயல் குழுதான்.

அரசு நிபந்தனை ஏற்கத் தக்கது என்றால், ஊழியர்கள் ஏற்றுக் கொள்ளுவார்கள். ஏற்கத்தக்கது அல்ல என்றால் நிராகரித்து விடுவார்கள்.

எங்களைப் பொறுத்த வரையில் போராடும் ஊழியர்களை ஆதரிப்போம்!

இதில் ஒரு பகுதி போராடுவது—மற்று பகுதி எதிர்ப்பது என்ற பேச்சுக்கே இடமில்லை என்று கூறினார்.

## தினமணியின் புளுக்கு

### இ. எம். எஸ். மறுப்பு!

கேரள அரசின் முன்னாள் போக்குவரத்து அமைச்சர் இம்பச்சிபாவா அவர்கள் ஸ்டேட் போக்குவரத்து கார்ப்பரேஷன் நியமனங்கள் சிலவற்றில் லஞ்சம் பெற்றார் என்றும் —ரேஷன் மொத்த, சில்லரை விநியோகம் சம்பந்தப்பட்ட சில நியமனங்களில் லஞ்சம் பெற்றதோடு தமக்கு வேண்டியவர்களுக்கும் வேலை தந்துள்ளார் என்றும் வேலுப் பிள்ளை கமிஷன் கூறியிருப்பதாக மதுரையிலிருந்து வெளிவரும் 12—1—71 தேதிய தினமணி பத்திரிகை செய்தி வெளியிட்டிருக்கிறதே, அதுபற்றி உங்கள் விளக்கம் என்ன என்று 14—2—71-ல் மதுரை வந்திருந்தபோது பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் தோழர் இ. எம். எஸ் நம்பூதிரிபாதிடம் கேட்கப்பட்டது.

#### அப்பட்டமான பொய்ச் செய்தி

இ எம். எஸ். பதில் அளிக்கையில் கூறியதாவது:

"மந்திரிகள் மீது அழிமதிக் குற்றச்சாட்டுகள் கூறப்பட்டிருந்தன அழிமதிகள் என்றால் மலையாள மொழியில், கெட்ட எண்ணத்துடன் செய்யப்படும் காரியங்கள் என்று பொருள் படும். பொதுவாக அழிமதிகள் என்பார்கள்,

இதுபற்றி விசாரணை நடத்திய வேலுப் பிள்ளைக் கமிஷன், அழிமதி என்றால் லஞ்சம் என்ற அர்த்தத்தில் இக்குற்றச்சாட்டுகள்மீது விசாரணை நடத்துவதாகக் கூறி விசாரணை நடத்தினார்.

அப்படி நடத்தியதில் இம்பச்சி பாவாவும் சரி இதர மார்க்சிஸ்ட் மந்திரிகளும் சரி எந்தவிதமான லஞ்ச ஊழலும் இல்லை.

அவர்களுக்காகவோ— அல்லது அவர்களது கட்சிக்காகவோ—யாரிடமிருந்தும் லஞ்சம் வாங்கவில்லை, தனிச் சலுகைகளும் அளிக்கவில்லை என்று திட்டவட்டமாகக்குறிப்பிட்டிருக்கிறார்.

வேலுப்பிள்ளை விசாரணை அறிக்கையில் எந்த இடத்திலும் இம்பச்சிபாவா லஞ்சம் வாங்கியதாக ஒரு வரிகூட இல்லை.

தினமணியில் வந்த செய்தி முழு பொய்யான செய்தி."

கேரளத்தில் உள்ள எந்தப் பத்திரிகையும் எவரும் இந்தக் குற்றச்சாட்டை சொல்லவில்லை" என்றும் இ எம். எஸ். கூறினார்.

## தீக்கதிர் ஏஜெண்டுகளின் உடனடி கவனத்திற்கு

சென்ற 7ம் தேதியிலிருந்து 3-ம் தேதி முடிய உங்களுக்கு அனுப்பப் பட்டுள்ள தீக்கதிர் பத்திரிக்கையில் கமிஷன் போக மீதி பணத்தை உடனடியாக தீக்கதிர் அலுவலகத்திற்கு அனுப்பிவைக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். உங்களிடத்தில் முன் பணம் கோராமல் தீக்கதிர் அனுப்பப்படுகிறது என்பதை நீங்கள் மறவாமல் வாரா வாரம் அனுப்ப வேண்டிய தொகையை கட்டாயமாக அனுப்பிவிட வேண்டும்.

இதை 16-ம் தேதிக்குள் அனுப்பத் தவறினால் அதே தேதியிட்ட தீக்கதிர் அனுப்பப்பட மாட்டாது என்பதை தெரிவித்துக் கொள்கிறோம்.

இது வரை தபாலில் அனுப்பப்படாத தோழர்களுக்கு நாளை (15—2—71) யிலிருந்து அனுப்பப்படும். தபாலில் தீக்கதிர் பெறும் ஏஜண்டுத் தோழர்கள் தங்களுக்கு பிரதிகள் கிடைத்த ஒரு வார காலத்திற்குள் அதற்கான (கழிவு தொகை போக) தொகையை தீக்கதிர் அலுவலகத்திற்கு அனுப்பிவிடவேண்டும்.

சந்தாதாரர்களுக்கும் இதே தேதியிலிருந்து தீக்கதிர் அனுப்பப்படும். அவர்களது சந்தா தொகை எங்களிடம் உள்ள பாக்கியை புதிய தீக்கதிர் சந்தா தொகைக்குச் சரி கட்டப்படும் என்பதை தெரிவித்துக் கொள்கிறோம்.

புதிய சந்தா விகிதம்

மாத சந்தா: ரூ. 3-60
3 மாத சந்தா ரூ. 10—00

நிர்வாகி
தீக்கதிர்.

## அரசியல் சட்டத்தின்.........

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

மகாராஜாக்களையும் மகாராணிகளையும் பெரு நிலப்பிரபுக்களையும் குடிசை வாழ்வோருடன் சமத்துவமாக இந்த அரசியல் சட்டம் வைக்கின்றது. இவர்கள் அனைவரையும் 'பிரஜைகள்' என்றே அது குறிப்பிடுகின்றது. இவர்கள் அனைவரும் கடவுளின் குழந்தைகள் 'சமமானவர்கள் என்றே அரசியல் சட்டம் பிரகடனப் படுத்துகிறது' அரசியல்சட்டம் இந்திய மக்களுக்கு பெரும் மோசடியானதாகும்.

அரசியல் சட்டத்தின் அடிப்படை உரிமைகளைப் பற்றி புகழ்பாடும் அறிவிலிகள் இந்நாட்டில் உள்ளனர். ஏதாவது ஒரு விதத்தில் சோஷலிஸ்டுகள் என்று சொல்லிக் கொள்ளுபவர்களும் இவர்களில் உள்ளனர் அனைவருக்கும் சமத்துவத்துக்கு உத்திரவாதம் அளிக்கும்சமூகத்தில் தான் அடிப்படை உரிமைகளுக்கு ஆதாரம் இருக்கமுடியும் உற்பத்தி சாதனங்கள் சம்பந்தமாக சமத்துவம் அளித்து சுரண்டலிலிருந்து சுதந்திரத்துக்கு உத்திரவாதம் அளித்திருக்கும் போது தான் அடிப்படை உரிமைகளுக்கு ஆதாரம் இருக்க முடியும். யதார்த்தத்தில் சமத்துவத்தை மறுத்து விட்டு வார்த்தையளவில் தேவைக்கு பிரகடனம் செய்திருப்பதுதான் அரசியல் சட்டத்திலுள்ள சூழ்ச்சியாகும். முடிவான கணிப்பில் உற்பத்தி சாதனங்களின் மீது சில வர்க்கங்களின் பிடிப்பை வலுப்படுத்துவதற்கே இதுவழி வகுக்கிறது.

உற்பத்தி சாதனங்களின் உடைமை சம்பந்தமாக விளக்கம் கூறும்போது அடிப்படை உரிமைகளுக்கு நீதி மன்றங்கள் அளித்த விளக்கத்தை நாம் பார்த்தோம் பாங்குகள் தேசவுடைமை சம்பந்தமாக சுப்ரீம்கோர்ட் தீர்ப்பளிக்கும்போது முழு நஷ்டஈடு தர வேண்டும் என்றும் முந்தைய பாங்கர்கள் தொழில் நடத்த அனுமதிக்க வேண்டும் என்றும் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்தது இந்த நிபந்தனைகளையெல்லாம் அரசாங்கம் ஏற்றுக்கொண்டது

பாங்குகள் தேசவுடைமையாக்கப்பட்ட நடவடிக்கை சுரண்டும் வர்க்கத்திடமிருந்து சொத்தை எடுத்து சுரண்டப்படும்வர்க்கத்திடம்கொடுக்கும் நடவடிக்கை அல்ல. அதேவர்க்கத்தின் அரசிடம் பாங்குகளை மாற்றிக்கொடுக்கும் நடவடிக்கைதான் அது. ஆனால் ஒரு சமூக எழுச்சி ஏற்பட்டுள்ளது போன்று கூக்குரல் கிளம்பியுள்ளது.

ஒரு சோஷலிஸ்ட் நாட்டின் அரசியல் சட்டத்துடன் இந்த அரசியல் சட்டத்தை ஒப்பிடும் போதுதான் இந்தச் சூழ்ச்சி நன்றாகப்புரியும்

## எஸ். எஸ். பி யிலிருந்து 14 எம். எல். ஏக்கள் விலகினர்

பாட்னா, பிப் 14— பீகாரில் 14 சட்டமன்ற உறுப்பினர்கள் எஸ். எஸ் பி கட்சியிலிருந்து விலகி விட்டார்கள்.

அமைச்சரவையில் பெண்களுக்கும் அரிஜனங்களுக்கும் பிரதிநிதித்துவம் போதாது என்று அவர்கள் விடுத்துள்ள அறிக்கையில் கூறியுள்ளனர்.

பீகார் அமைச்சரவை எஸ் எஸ் பி. யின் தலைமையில் அமைந்துள்ளது.

## தி. மு. க. வில் பதவி சண்டை 19 பேர் சஸ்பெண்ட்

சென்னை, பிப். 14— தி. மு க. பதவிச் சண்டையில் இதுவரை 19 பேர் கட்சியிலிருந்து விலக்கி வைக்கப்பட்டிருப்பதாக அதிகாரபூர்வமாக அறிவிக்கப்படுகிறது

ராகவானந்தமும் என். டி. கருணாநிதியும் கட்சியின் அதிகாரபூர்வமான வேட்பாளர்களை எதிர்த்துப் போட்டியிடுவதால் கட்சியிலிருந்து விலக்கி வைக்கப்பட்டிருப்பதாக அறிவிக்கப்படுகிறது.

"அள்ளி வழங்கியதாய்" அளப்பவர்களே

## இரும்புக்கரம் எடுத்தது எந்தக் காலத்தில்?

### மின்ஊழியர், அரசுஊழியர் போராட்டம் காட்டுவது என்ன?

"அரசு ஊழியருக்கு 20 கோடி-மின் ஊழியருக்கு 4 கோடி அள்ளி வழங்கியது. இந்தக் காலத்தில்' என்று தி. மு. க. சுவரொட்டிஅடித்து நகரெங்கும் ஒட்டியிருக்கிறது:

அள்ளி வழங்க இது யாசகம் அல்ல! மாறாக பாடுபடும் மக்கள் ஊதியம் கேட்பது ஜீவாதார உரிமை'

அரசுதந்திருக்கும் இந்த கண்துடைப்பு ஊதிய உயர்விற்கே கடும் எதிர்ப்பு தெரிவித்துள்ள அரசு ஊழியர்களும் மின்ஊழியர்களும் இதையும் வழங்காமல் இருந்திருந்தால் கடும் போராட்டம் நடத்தி கழக ஆட்சியாளர்களை கதிகலங்க அடித்திருப்பார்கள், (கேரள அரசு ஊழியர்களின் மகத்தான போராட்டத்தினால் கேரள அரசே சலனமின்றி ஸ்தம்பித்துக் கிடப்பதை நினைவுகூர்வது நல்லது)

எனவே—

ஏதோ தங்களது 'கைப் பணத்தை எடுத்துப் பிச்சை வழங்கியதைப் போல சித்தரித்துக் கொச்சைப்படுத்துவது அரசு ஊழியர்களையும், மின் ஊழியர்களையும் அவமானப் படுத்துவதாகும்!

அடுத்து—

இவர்கள் ஏதோ கோடி கோடியாகக் கொட்டிக் கொடுத்து விட்டதைப் போல கூறப்பட்டிருக்கிறதே'

உண்மை என்ன?

இந்த ஊதிய உயர்வு விகிதங்கள் அறிவிக்கப்பட்டபோது அரசு ஊழியர்களும், மின் ஊழியர்களும் அதனை எப்படி வரவேற்றார்கள்?

ஆரத்தி எடுத்து மகிழ்ந்தார்களா? வாரி வழங்கி சிவந்த கரங்களைவாழ்கவென்று வாழ்த்தினார்களா?

- 4 கோடி ரூபாயை மின்சார ஊழியருக்கு வழங்கிய போதுதான் — அதனால் அதிருப்தி அடைந்த மின் ஊழியர்கள் 21—5—70 அன்று பெருந்திரளாக லீவு போட்டனர்!

அப்போதுதான்—

திரு. கருணாநிதியின் உடலில் புதிதாக ஒரு அங்கம் முளைத்தது அந்த அங்கம் "இரும்பு கரம்" 4 கோடி கொடுத்ததைக் கண்டு — கோடி கோடி வணக்கங்கள் போட வேண்டியவர்களை - இரும்புக்கரம் எடுத்து அடக்க வேண்டிய நிலை ஏன்?

- கல்லுப்பட்டி, நாகர் கோவில், கோவை ஆகிய இடங்களில் பொறியாளர்களை கைது செய்ய வேண்டிய நிலை ஏன்?
- கேசுவல் லீவு போட்ட பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் 24 மணி நேரத்திற்குள் வேலைக்குத் திரும்பாவிட்டால் சஸ்பெண்ட் செய்யப்படுவார்கள் என்று அச்சுறுத்திய நிலை ஏன்?

மின் ஊழியர்களுக்கு 4 கோடி கொடுத்ததாக தம்பட்டம் அடிப்பவர்களே! 4 கோடி கொடுத்த பின்னரும்—இப்படி 'இரும்புக் கரம்' எடுத்தது ஏன்?

இது உங்களுடைய "கண் துடைப்பு" நாடகத்தை அம்பலப்படுத்த வில்லையா!

இது போலவே அரசு ஊழியர்களுக்கு 20 கோடி ரூபாய் கொடுத்திருப்பதாக பீற்றிக் கொள்ளும் தி. மு. க. வினரே!

அரசு ஊழியர்களும் — கால் நடை உதவியாளர்களும் கிராமசேவக்குகளும் ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களும், பட்டதாரி ஆசிரியர்களும் மீண்டும் ஊதிய விகிதத்தைத் திருத்தி அமைக்க வேண்டுமென்றும், இல்லையெல் நேரடி நடவடிக்கையில் ஈடுபடப்போவதாக அரசினை எச்சரித்துள்ளனரே!

அது மக்களுக்குத் தெரியாது என்று தி. மு கழகம் நினைத்தால் — அதைவிட கோமாளித்தனமான வேறு விஷயம் இருக்க முடியாது!

எனவே — காங்கிரஸ் ஆட்சியாளர்களைப் போலவே "சொத்தை" சாதனைகளைக் காட்டுவதினால் மக்களை தொடர்ந்து ஏமாற்றிவிட முடியாது

## தூத்துக்குடி கூட்டுறவு தொழிலாளர் உண்ணாவிரதம்

தூத்துக்குடி, பிப். 11— திருநெல்வேலி மாவட்ட கூட்டுறவு விநியோக விற்பனை சொசைட்டி நிர்வாகம் தொழிலாளர்களைப் பழி வாங்கியதை எதிர்த்து, தொழிலாளர்கள் தொடர் உண்ணாவிரதம் பிப்ரவரி 7-ம் தேதியிலிருந்து நடந்து வருகிறது.

கோரிக்கைகள் கிடைக்கும் வரை போராடுவது என்று தொழிலாளர்கள் முடிவு செய்துள்ளனர்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து. வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர்: கே. முத்தையா.